வருடச் சந்தா போஸ்டேஜ் உள்பட ரூ. 4

[ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையில் மெம்பர்களாகச் சேர்ந்தவர்கள் இதற்காகத் தனிச் சந்தா செலுத்தவேண்டா]

# ஸ்ரீராமாநுஜன்.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

— 7 —

மொழியைக்கடக்கும் பெரும்புகழான் * வஞ்சமுக் குறும்பாம்
குழியைக்கடக்கும் நம் கூரத்தாழ்வான் சரண்கூடியபின் *
பழியைக்கடத்து மிராமாநுசன் புகழ்பாடி அல்லா
வழியைக்கடத்தல் * எனக்கினி யாதும் வருத்தமன்றே.

மதராஸ்

ஸத்கிரந்த பிரகாசன சபையின் வெளியீடு

கிடைக்குமிடம்: P.B. அண்ணங்கராசாரியர், க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்

10—3—1949

# பரந்த ரஹஸ்யம் என்கிற க்ரந்தத்தைப் பற்றி
# ஓர் விஜ்ஞாபனம்.

திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகம் என்கிற ரஹஸ்யங்களின் ஸகலார்த்தங்களையும் விவரிக்கப் பிறந்த திவ்யக்ரந்தங்களுள் பரந்த ரஹஸ்யமென்பது மிகவும் ப்ரஸித்தமானது. இதை நாற்பது வருஷங்களுக்கு முன்பு முதன் முதலாக அஸ்மதாசார்யரான ஸ்ரீமத்பரமஹம்ஸ. (கீர்த்தி மூர்த்தி.) ஸ்ரீ காஞ்சீ அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி தெலுங்கு லிபியில் அச்சிடுவித்தருளினர். அதற்குப் பிறகும் தெலுங்கு லிபியிலேயே ஒரு பதிப்பு சென்னை ஸ்ரீ வைஷ்ணவ க்ரந்த முத்ராபக ஸபையாருடையதாக வெளிவந்திருக்கின்றது. ஸமீப காலத்தில் அடியேனுடைய ஸம்பந்தம் பெற்று முதன் முதலாகத் தமிழ்லிபியில் ஒரு பதிப்பு வெளிவந்திருப்பது அன்பர்களறிந்ததே. இந்த திவ்யக்ரந்தம் பெரியவாச்சான் பிள்ளையருளிச் செய்ததாக வெளியிடப்பட்டு விட்டது. ஸ்ரீரங்கத்திலெழுந்தருளியிருக்கின்றவொரு பெரியாருடைய உத்போதநத்தினால் இதைப்பற்றி ஆராய்ச்சி செய்ய நேர்ந்தபோது, இந்தக்ரந்தம் ஆச்சான்பிள்ளை பணித்ததேயன்றிப் பெரியவாச்சான்பிள்ளை பணித்ததன்று என்பது தேறி நின்றது. எதனாலென்னில்; முமுக்ஷுப்படி வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள் இப்பரந்த ரஹஸ்ய ஸ்ரீ ஸூக்திகளை அடிக்கடி உதாஹரித்தருளியுள்ளார்; அவ்விடங்களிலெங்கும் ஆச்சான் பிள்ளை யென்றே நியமேந அருளிச் செய்திருக்கக் காண்கிறோம்.

அதில் பன்னிரண்டாவது சூர்ணையின் வியாக்கியானம், த்வய ப்ரகரணத்தின் அவதாரிகை முதலான விடங்கள் காண்க. 98-ஆவது சூர்ணையின் விபுலமான வியாக்கியானத்தில் ஆச்சான்பிள்ளை திருநாமத்தை ஐந்து தடவை ப்ரஸ்தாவித்து அவருடைய ஸ்ரீ ஸூக்திகளையும் உதாஹரித்தருளியுள்ளார். இங்ஙனே பல விடங்களுண்டு. எங்கும் ஆச்சான்பிள்ளையென்றே நிர்தேசமுள்ளது. பெரியவாச்சான்பிள்ளையையே ஆச்சான்பிள்ளை யென்கிறார் என்று நினைப்பதும் கூறுவதும் சிறிதும் பொருந்தாது. * ஸ்ரீமத் க்ருஷ்ண ஸமாஹ்வாய * என்பது பெரியவாச்சான்பிள்ளை தனியன். * ச்ருத்யர்த்த ஸாரஜநகம் * என்பது ஆச்சான் பிள்ளை தனியன். இதில் * அபயப்ரத ராஜபுத்ரம் * என்று கூறப்பட்டார் ஆச்சான்பிள்ளை. இவருளிச் செய்த சதுச்ச்லோகீவியாக்கியானம், தத்வஸங்க்ரஹம் முதலானவற்றில் ஸம்ஸ்க்ருத வாக்ய பஹுளமாகவே யெழுதிப் போருகிற பத்ததியை நன்கு காண்கிறோம். அதே விதமான வாக்ய ரசநாவைகரியை இப்பரந்த ரஹஸ்யத்திலும் அப்படியே காண்கிறோமென்பதும் ஒரு முக்கியமான சான்று. மற்றும் பல ஹேதுக்களாலும் இத்திவ்யக்ரந்தம் ஆச்சான்பிள்ளை யருளியதே யன்றிப் பெரியவாச்சான்பிள்ளை யருளியதன்று என்பது பெரியோர்களால் நிர்த்தாரணம் செய்யப்பட்டது. அப்படிப்பட்ட திருத்தத்துடன் கூடிய மறுபதிப்பு அச்சாகி முடிந்திருக்கின்றது. விரைவில் வெளிவரும்.

இங்ஙனம்:

**ப்ர. அண்ணங்கராசாரியர்.**

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 7.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசக ஸபையின் வெளியீடு]

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சி பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| முதல் தொகுதி | 10-3-1949<br>ஸர்வதாரி௵ மாசி௴ | 7-வது பகுதி. |
|---|---|---|

## மார்கழிநீராட்டமும் — எம்பெருமானாரும்.

சென்றவிதழில் "பெரும்பூதூர்மாமுனிக்குப் பின்னானாள் வாழியே" என்னும் வாழியை விவரிக்குமடைவில் ஆண்டாளருளிச் செயலால் எம்பெருமானார்பெருமை மிகத் தெளிவாக விளங்குகின்ற படியை விரிவாக நிரூபித்தோம். அப்போது, மார்கழி நீராட்டமாவது மார்க்கசீர்ஷாவகாஹநமென்றும், அதாவது மார்க்கங்களுக்குள்ளே சீர்ஷமான [உபாயங்களுக்குள் தலைபான] ஆசார்யாபிமானத்தில் அவகாஹிப்பதே யென்றும் கூறி, அப்படிப்பட்ட மார்க்க சீர்ஷாவகாஹனத்தில்தான் ஆண்டாள் மிகுந்த அபிநிவேசமுடையவளென்பதை நாச்சியார் திருமொழிப் பாசுரங்களினால் நிரூபிப்பதும் செய்தோம். பிள்ளை லோகாசார்யரும் ஸ்ரீ வசநபூஷண திவ்ய சாஸ்த்ரத்தின் முடிவில் ஆண்டாள் பாசுரத்தைக் கொண்டே சரமோபாய வைபவஸ்தாபநம் செய்தருளியிருக்கையாலே அவ்விஷயத்தில் இன்னமும் விரிவாக நிரூபிக்கவும் தெளிவு பிறப்பிக்கவும் அவசியமில்லை. "ஆழிமழைக்கு அண்ணா! நாங்களும் மகிழ்ந்து மார்கழி நீராட வாழவுலகினில் பெய்திடாய்" என்றதற்குச் சேர எம்பெருமானார்க்கு இதுதன்னிலுள்ள அந்வயம் நிரூபிக்கப்படவேண்டுவது மிக அவசியமாதலால் அஃது இப்போது நிரூபிக்கப்படுகிறது.

உபாயங்களில் தலையான ஆசார்யாபிமானத்தின் ப்ரஸ்தாவம் வந்தபோதே ஸ்ரீ வைஷ்ணவவுலகுக்கு எம்பெருமானாருடைய நினைவு வந்தே தீருமென்பதில் விவாதமுண்டோ? எம்பெருமானார்க்கு முன்னேயும் சில ஆசாரியர்கள் அவதரித்தருளியிருந்தாலும் நம்முடைய உஜ்ஜீவநஹேதுவாக அவர்களுடைய அபிமானத்தை நாம் கண்டிலோம். எம்பெருமானார் திருவவதரித்தபின்புதான் ஆசார்யாபிமாநமென்கிற சொல்வடிவமே தோன்றியது என்று சொல்லவும் பொருத்தமுண்டு. இப்படிச் சொல்லுதவற்குண்டான உபபத்தியைக் கேளீர்;— ஸ்வாமி எம்பெருமானார் ஒருநாள் விபீஷண சரணாகதி ப்ரகரணத்தை உபந்யஸித்தருளாநின்றார்; * த்யக்த்வா புத்ராம்ச்ச தாராம்ச்ச ராகவம் சரணம் கத: * என்கிற படியே புறம்புண்டான பற்றுக்களையடைய வாளையோடே விட்டு விபீஷணன் * ஸர்வலோக சரண்யாய ராகவாய மஹாத்மநே, நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷண முபஸ்திதம் * என்று சொல்லி வாநரமுதலிகளைப் பிரார்த்திக்க, அவர்கள் இவ்விபீஷணனை அநுகூலனாகக் கொள்ளாமல் பிரதிகூலனாகவே கொண்டு பலவகைத் தீங்குகளைச் செய்யத்

தொடங்கினார்கள்—என்கிறவிதனை ஸ்வாமி விரிவாக உபந்யஸித்தருளா நிற்கையில், அப்போது ஆனந்தமாகக் கேட்டுக் கொண்டிருந்தவர்களில் ஒருவரான பிள்ளையுறங்கா வில்லிதாஸர் கோஷ்டியில் நின்று எழுந்திருந்து விக்கிவிக்கியழுது தம்முடைய வொரு பெரிய ஸந்தேஹத்தை விண்ணப்பஞ்செய்து இதைப் பரிஹரித்தருளினாலொழிய மேலே கதை கேட்க விருப்ப மில்லாமையைக் கூறி நின்றார். அவர் விஜ்ஞாபித்த ஸந்தேஹமாவது—விபீஷணாழ்வானுக்கு ஆர்த்தி முதலிய அதிகார பூர்த்தியில் யாதொரு குறையுமில்லை; ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமும் கபடமாகவல்லாமல் உண்மையாகவேயுண்டாகி நெஞ்சுகனிந்த பக்தியுடன் வந்து சேர்ந்த இவனுக்கே பகவத் கோஷ்டியில் ப்ரவேசம் எளிதாகக் கிடைக்க வில்லையென்றும், பகவானுக்கு அந்தரங்க மந்திரிகளாக இருந்தவர்களால் மிகுந்த பரிபவமும் ஆக்ஷேபமும் விளைந்ததென்றும் கண்டால், அவ்விபீஷணாழ்வானுடைய அதிகாரத்தில் நூற்றிலொன்று கூட இல்லாத எம்போலியர்க்கு பகவதங்கீகாரத்தைக் கனவில்கூடக் காண்பதற்கு ப்ரஸக்தி யில்லையன்றோ ; ஆகவே எம்போலியர் உஜ்ஜீவிக்க வழியுண்டோ இல்லையோ ? என்பதாக.

இதைக் கேட்ட எம்பெருமானார் உடனே அவர்க்குப் பரம த்ருப்திகரமாக ப்ரத்யுத்தரமருளிச் செய்தார் ; "விபீஷணாழ்வானைப்போலே நாம் எம்பெருமானைப் பற்றினோமன்றே இப்படி ஸந்தேஹித்து இடிவிழுந்து நிற்கவேண்டும் ; நாம் எம்பெருமான் கை பார்த்திருக்குமவர்களல்லோங் காணும் ; உமக்கு நானுண்டு, எனக்குப் பெரிய நம்பியுண்டு" என்று.

இதன் கருத்தாவது—எம்பெருமான் மோக்ஷமளிக்கவும் வல்லவன், மேன் மேலும் ஸம்ஸாரத்திலே தள்ளவும் வல்லவன். நிக்ரஹாநுக்ரஹங்களுக்குப் பொதுவான ஸ்வாதந்திரியமுடையவனாகையாலே அவனைப் பற்றினார்க்கு நெஞ்சுதளும்பியேயிருக்க நேரும் ; அவனைப் போலன்றிக்கே அநுக்ரஹமே வடிவெடுத்த ஆசாரியர்களைப் பற்றினார்க்கு ஸந்தேஹ கந்தமுமின்றிக்கே மார்பிலே கைவைத்து உறங்கலாம்படியிருக்கும் என்கை. இவ்வர்த்தம் மஹர்ஷிகளின் வசனத்தாலும் தேறநின்றது ; * ஸித்திர் பவதி வா நேதி ஸம்சய: அச்யுதஸேவிநாம், ந ஸம்சயோஸ்தி தத்பக்தபரிசர்யாரதாத்மநாம் * என்கிற ப்ரமாணத்தை இங்கே அநுஸந்திப்பது. [இதன் பொருள் ;—எம்பெருமானைப் பற்றினார்க்கு ஸத்கதிப்ராப்தியாகிற ஸித்தியுண்டோ இல்லையோ வென்கிற ஸந்தேஹ முள்ளது ; தத்பக்தர்களாகிற பாகவதர்களைப் பற்றினார்க்கு அப்படிப்பட்ட ஸந்தேஹம் உதிக்கவே மாட்டாது என்பதாம்.]

இங்ஙனே அவரவர்கள் தம் தம் ஆசாரியர்களைப் பணிந்து உஜ்ஜீவித்தல் என்பது இருக்கச்செய்தேயும், * தஸ்மிந் ராமாநுஜார்யே குருரிதி ச பதம் பாதி நாந்யத்ர * என்கிறபடியே ஆசார்யரென்கிற சொல்லுக்குப் பொருளாயிருக்குந்தன்மை எம்பெருமானாரொருவர்க்கே உரித்தாக வுள்ளதாதலால் அவருடைய திருவடிஸம்பந்தம் பெற்றவர்களுக்கே ஸத்கதி ப்ராப்தியில் ஸந்தேஹமற்றிருக்க ப்ராப்தம்.

திருவடிஸம்பந்தமென்று விசேஷித்துச் சொல்லவேண்டிய அவச்யமுமில்லை ; ஏதேனுமொரு ஸம்பந்தமிருந்தாலும் போதும். திருவடிஸம்பந்தந் தவிர வேறு என்ன ஸம்பந்த மிருக்க முடியுமென்று சிலர் கேட்கவும் சிந்திக்கவுங்கூடும்.

திருவடி ஸம்பந்தம்போல் திருமுடி ஸம்பந்தமும் ஒன்றுண்டே; முற்பட்டவர்களுக்குத் திருமுடி ஸம்பந்தம், பிற்பட்டவர்களுக்குத் திருவடி ஸம்பந்தம் என்று நம்பூர்வர்களே

பிரித்துக் காட்டியுள்ளார்கள். கூரத்தாழ்வானுடைய பெருமையைப் பேசப் பிறந்ததான *அர்வாஞ்சோ யத்பதஸரஸிஜத்வந்த்வ மாச்ரித்ய பூர்வே மூர்த்நா யஸ்யாந்வய முபகதா தேசிகா முக்திமாபு:, ஸோயம் ராமாநுஜமுநிரபி * என்னும் ச்லோகத்தில் இவ்விஷயம் வ்யக்தமாகக் கூறப்பட்டுள்ளது. எம்பெருமானார்க்கு முன்புள்ள முதலிகள் அவருடைய திருமுடி ஸம்பந்தத்தினால் முக்தி பெற்றார்களென்றும், பிற்பட்டவர்கள் அவருடைய திருவடி ஸம்பந்தத்தினால் முக்தி பெற்றார்கள்—பெறுகிறார்கள்—பெறுவார்கள் என்றும் சொல்லப்படுகிற இவ்விஷயம் வேதாந்த தேசிகனுடைய திருவாக்கிலும் ஸுவ்யக்தமாக வுள்ளது; அவர் தாம் பணித்த ந்யாயபரிசுத்தியில் எம்பெருமானாரைப்பற்றியவதரித்த மங்கள ச்லோகத்தில் இது காணத்தக்கது. அஃது எங்ஙனே யென்னில்; * [illegible]—பத்யுஸ் ஸம்யமிநாம் ப்ரணம்ய சரணௌ தத்பாதகோடீரயோஸ் ஸம்பந்தேந ஸமித்யமாநவிபவாந் தந்யாந் ததா அந்யாந் குரூந் * என்பது அந்த மங்கள ச்லோகம். இதன் பொருளாவது—ஸம்யமிநாம் பத்யு:-யதிராஜரான எம்பெருமானாருடைய, சரணௌ—திருவடிகளை, ப்ரணம்ய—வணங்கியும், தத்பாத கோடீரயோ: ஸம்பந்தேந—அந்த எம்பெருமானாருடைய திருவடியென்ன திருமுடியென்ன இவற்றினுடைய ஸம்பந்தத்தினால், ஸமித்யமாநவிபவாந்—மிகப் பெருமை பெற்றவர்களாய், தந்யாந்—க்ருதார்த்தர்களான, குரூந் ப்ரணம்ய—ஆசார்யர்களை வணங்கியும்...........ந்யாய பரிசுத்தியென்கிற இந்த க்ரந்தம் செய்யப்படுகிறது—என்கை. இதில் * தத்பாத கோடீரயோஸ் ஸம்பந்தேந * என்றது உயிரான ஸ்ரீ ஸூக்தி. கோடீர மென்று திருமுடிக்குப் பெயர். பிற்பட்டவர்களுக்குத் திருவடி ஸம்பந்தம் போலே முற்பட்டவர்களுக்குத் திருமுடி ஸம்பந்தம் உத்தாரகமென்று இதனால் நன்கு காட்டப்பட்டதாயிற்று.

"பிற்பட்டவர்களுக்கு ஸ்வாமியின் திருவடி ஸம்பந்தத்தினால் மோக்ஷமென்றால் இது நெஞ்சில் நன்கு பொருந்துகின்றது. முற்பட்டவர்களுக்குத் திருமுடி ஸம்பந்தத்தினால் மோக்ஷ முண்டாயிற்றென்றால் இந்த வார்த்தை அந்வயிக்கவேயில்லையே; ஸ்ரீமந் நாதமுனிகள் உய்யக்கொண்டார் மணக்கால்நம்பிபோல்வார்தானே ஸ்வாமிக்கு முற்பட்டவர்கள்? அவர்கள் என்றைக்கோ பரமபதம் போய்ச் சேர்ந்தவர்களன்றோ; அவர்களது காலத்தில் ஸ்வாமி யெம்பெருமானார் அவதரித்திருந்தாலன்றோ இவருடைய திருமுடி ஸம்பந்தம் அவர்களுக்கு நேர்ந்ததென்று சொல்ல இடமுண்டு. இவருடைய அவதாரமே நடந்திலாத ஸமயத்தில் இவருடைய திருமுடி ஸம்பந்தம் அவர்களுக்கு எப்படி ப்ராப்தமாகக் கூடும்? இது அஸம்பாவிதமான வார்த்தையாக இருக்கின்றதே!" என்று சிலர் சங்கிக்கக் கூடும். இதற்குச் சொல்லுகிறோம்; சாஸ்த்ரங்களில் உத்தம புருஷர்களின் பிரபாவங்களைச் சொல்லுமிடத்து * தச பூர்வாந் தச அபராந்......புநாதி * என்றும் * ஸப்த ஸப்த ச ஸப்த ச * என்றும் சொல்லப்பட்டிருப்பது ப்ரஸித்தம். ஒரு வம்சத்தில் ஒரு மஹநீய புருஷன் தோன்றினால் அவனுடைய பெருமேன்மையினால் முன்னே பல தலைமுறையாரும் பின்னே பல தலைமுறையாரும் வாழ்ச்சி பெறுவதாகச் சொல்லப்படுகிறது. நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் * செடியார் நோய்களெல்லாம் துறந்து எமர் கீழ்மே லெழுபிறப்பும் விடியா வெந்நரகத்து என்றுஞ் சேர்தல்மாறினரே * என்றும் * கேசவன்தமர் கீழ்மே லெமரேழெழுபிறப்பும் மாசதிரிது பெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா * என்றுமருளிச்செய்தார். ஆகவே முற்பட்டவர்களையும் ஸத்கதி பெறுவிக்கும் பெருமை பிற்பட்டவர்களுக்கு விளைகின்றதென்பது சாஸ்த்ர ஸம்மதமே யென்றுணர்க.

முற்பட்டவர்களின் விஷயம் எப்படியாவதிருக்கட்டும்; பிற்பட்டவர்களுக்கு ஸ்வ ஸம்பந்தத்தினால் ஸத்கதிபெறுவிப்பது தவறாதென்பதே இங்கு முக்கியமாக விவக்ஷிதம். நம்முடைய ஸதாசார்யபரம்பரையில் இப்பெருமை எம்பெருமானார்க்கு, அஸாதாரணமாயிருக்கும். இதனை சரணாகதி கத்யபாஷ்யத்தில் ச்ருதப்ரகாசிகாசார்யரும், ந்யாஸதிலகத்தில் வேதாந்த தேசிகனும், யதிராஜ விம்சதியில் மணவாளமாமுனிகளும் அருளிச்செய்துள்ளார்கள்.

கத்யபாஷ்யத்திலருளிச் செய்தபடி யெங்ஙனே யென்னில்;— சரணாகதி கத்யத்தில் எம்பெருமானார் ஸ்ரீரங்கநாதன் திருவடிகளிலே ப்ரபத்தி பண்ணுவதற்குமுன்னே * பகவந் நாராயணாபிமதாநுரூப * என்று தொடங்கி * அகில ஜகந்மாதரம் அஸ்மந்மாதரம் அசரண்ய சரண்யாம் அநந்யசரண: சரணமஹம் ப்ரபத்யே * என்று பெரிய பிராட்டியார் திருவடிகளிலே புருஷகார ப்ரபத்தி செய்தருளி * பாரமார்த்திகீ பகவச் சரணாரவிந்த சரணாகதிர் யதாவஸ்திதா அவிரதா அஸ்து மே * என்று பிரார்த்தித்தார். [பெரிய பெருமாள் திருவடிகளிலே நான் பண்ணப்போகிற ப்ரபத்தியானது ஸபலமாவதற்காகப பிராட்டியாரே! உமது திருவடிகளைத் தொழுகின்றேன் என்றதாயிற்று.] இதற்குப் பெரிய பிராட்டியாருடைய திருவாக்கிலிருந்து இரண்டு வாக்கியங்கள் மறுமொழியாக அவதரித்துள்ளன— * அஸ்து தே; தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே * என்று. இவ்விடத்தில் * அஸ்து தே * என்பதே போதுமானது. [ததாஸ்து— என்றபடி.] இதற்குமேலும் * தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே * என்றொரு வாக்யமும் வெளிவந்திருக்கின்றது. அந்த சரணாகதியினாலேயே எல்லாமும் குறையற நிறைவேறப் போகின்றதென்றபடி. இங்கு ஸர்வம் என்றதற்கு ம்நுமமான பொருளை ச்ருதப்ரகாசிகாபட்டர் ஸ்வாசார்ய ஸந்நிதியில் தாம் கேட்டபடியே விவரித்திருக்கிறார்— * ஸ்வ ஸம்பந்திஸம்பந்திநிஸ்தாரணமபி ஸர்வசப்தாபிப்ரேதம் * என்கிற ஸ்ரீஸூக்தியினால். உமக்கு மாத்திரமேயன்றிக்கே உம்முடைய ஸம்பந்தம் ஸாக்ஷாத்தாகவோ பரம்பரையாகவோ உள்ளவர்களுக்கும் பேறுதப்பாதென்று பெரியபிராட்டியார் அருள்புரிந்ததாக இதனால் ஸ்பஷ்டமாகின்றது.

இப்படி எம்பெருமான் தானும் எம்பெருமானார்க்கு ஒரு வரம் அருள்செய்ததாக வேதாந்த தேசிகன் ந்யாஸதிலகத்தில் * லக்ஷ்மணமுநேர் பவதா விதீர்ணம். ச்ருத்வா வரம் ததநுபந்தமதாவலிப்தே * என்ற ச்லோகத்தினால் ஸுஸ்பஷ்டமாகவருளிச்செய்தார். மணவாள மாமுனிகள் விம்சதியில் * காலத்ரயேபி கரணத்ரயநிர்மிதாதி பாபக்ரியஸ்ய சரணம் பகவத்க்ஷமைவ, ஸா ச த்வயைவ கமலாரமணே அர்த்திதா யத் க்ஷேமஸ் ஸ ஏவ ஹி யதீந்த்ர! பவத்ச்ரிதாநாம் * என்கிற ச்லோகரத்நத்தினால் தெளியவருளிச் செய்தருளினார். ஆகவே எம்பெருமானாருடைய ஸம்பந்தமே கொண்டு நம் போலியர்களும் பேறுதப்பாதென்று துணிந்திருக்கப் ப்ராப்தியுள்ளதாதலால் * நாங்களும் மார்கழி நீராட * என்றதனால் * பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் உள்ளூன்ற பொருள்வகையில் [ஸ்வாபதேசார்த்த மர்யாதையில்] தெரிவித்தது இதுவேயாகும். இதுவேயாயிற்று மார்க்க சீர்ஷாவகாஹநம்.

# ஸ்ரீபாஷ்யஸாரார்த்த ஸங்க்ரஹம்—ஆநந்தமயாதிகரணம்

— (முன் தொடர்ச்சி.) —

தைத்திரீயோபநிஷத்திலுள்ள ஆனந்தவல்லியை 'ஆநந்தமயவித்யா' என்று வேதாந்திகள் வழங்குவர். அந்த வித்யையில் * को ह्येवान्यात् कः प्राण्यात्। यदेष आकाश आनन्दो न स्यात्। एष ह्येवानन्दयाति। * [கோஹ்யேவாந்யாத் க: ப்ராண்யாத், யதேஷ ஆகாச ஆநந்தோ ந ஸ்யாத். ஏஷஹ்யேவாநந்தயாதி.] என்று ஓதப்பட்டிருக்கின்றது. இதன் பொருளாவது-கீழே சொல்லப்பட்ட ஆகாச சப்தவாச்யமான வஸ்துவானது நிருபாதிகமாயும் அபரிச்சின்னமாயுமிருக்கிற ஆநந்தத்தை உடையதல்லாமல் இருக்குமானால், பிரமன் முதற்கொண்டு எறும்புவரையிலுள்ள ஜந்துஸமூஹங்களில், கோ வா அந்யாத்=எந்த ஜந்துதான் ப்ராக்ருதமான ஆனந்தத்தையடையமுடியும்? கோ வா ப்ராண்யாத்=எந்த ஜந்துதான் மோக்ஷானந்தத்தைய்டைய முடியும்? ஏஷ ஏவ ஹி=இந்த ஆனந்தமயனை ஆத்மாவேயன்றோ, ஆநந்தயாதி—ப்ராக்ருதமாயும் அப்ராக்ருதமாயுமுள்ள எல்லாவிதமான ஆனந்தத்தையும் விளைவிக்கின்றது. [ஆநந்தயதி என்கிற சொல்வடிவத்தில் யகாரம் நீண்டிருப்பது சாந்தஸமென்றுணர்க.] இங்கே இப்படிச் சொல்லியிருப்பதும் தவிர, உத்தரநாராயணாநுவாகத்திலும் * तमेवं विद्वानमृत इह भवति। नान्यः पन्था विद्यतेऽयनाय। * தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி, நாந்ய: பந்தா வித்யதே அயநாய * என்பதனாலும் இவ்வர்த்தமே நிலைநாட்டப்பட்டிருக்கின்றது. ஏவம் தம் வித்வாந்—இவ்விதமாக அந்த மஹாபுருஷனை உபாஸிப்பவன், அம்ருதோ பவதி—மோக்ஷாநந்தத்தைப் பெற்றவனாகிறான், அயநாய—அந்த மோக்ஷானந்த ப்ராப்தியின் பொருட்டு, அந்ய: பந்தா ந வித்யதே—அந்த மஹாபுருஷனைத் தவிர்த்து வேறு உபாயமில்லை. என்பது இந்த ச்ருதிவாக்யத்தின் பொருள். * ஏஷஹ்யேவாநந்தயாதி * என்ற ச்ருதிவாக்யத்தில் அந்வயமுகேந தெரிவிக்கப்பட்ட அர்த்தமே * நாந்ய: பந்தா வித்யதே அயநாய * என்கிற ச்ருதிவாக்யத்தில் வ்யதிரேகமுகேந தெரிவிக்கப்பட்டிருக்கின்றது என்னுமித்தனையே வாசி. ஆக உபயச்ருதிகளும் ஏகார்த்தமாயிருக்கையினாலே, உத்தரநாராயணாநுவாக வாக்யம் லக்ஷ்மீபதியையே விஷயமாகக் கொண்டிருப்பது போலவே ஆநந்தமய வித்யையிலும் அப்பெருமானே விஷயபூதன் என்னுமிடம் அறிய வெளிது.

இன்னமும், ஆநந்தமய வித்யையில் * स यश्चायं पुरुषे। यश्चासावादित्ये। स एकः। * [ஸ யச்சாயம் புருஷே, யச்சாஸாவாதித்யே. ஸ ஏக:] என்கிற வாக்யத்தினால் ஆனந்தமயனையும் ஆதித்யமண்டலத்தினுள்ளேயுள்ள புண்டரீகாக்ஷனையும் ஒன்றாகச்சொல்லியிருப்பதனாலே அந்த புண்டரீகாக்ஷனே ஆநந்தமயன் என்று தேறிநிற்கிறது. ஆக இப்படிப்பட்ட அடையாளங்களினால் ஆநந்தமய வித்யாவேத்யனும் புண்டரீகாக்ஷனுமானவன் பரமபுருஷனே யென்று தேறிற்றாகிறது.

பூர்வபக்ஷர்:— ஆனந்த வல்லியில் * ब्रह्मविदाप्नोति परम् * [ப்ரஹ்மவிதாப்நோதி பரம்] என்று ப்ரஹ்மத்தை ப்ரஸ்தாவித்து * सत्यं ज्ञानमनन्तं ब्रह्म * [ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம *] என்று அந்த ப்ரஹ்மத்தின் லக்ஷணங்கூறி * तस्माद्वा एतस्मादात्मन आकाशः सम्भूतः। [தஸ்மாத் வா ஏதஸ்மாதாத்மந ஆகாசஸ் ஸம்பூத:.] இத்யாதி வாக்யத்தினால் அந்த ப்ரஹ்மம் ஆத்மாவென்னுமிடத்தையும் அதில் நின்றும் ஆகாசாதி பதார்த்தங்களின் உத்பத்தியையுஞ் சொல்லி, * तस्माद्वा एतस्माद्विज्ञानमयात्। अन्योऽन्तर आत्माऽऽनन्दमयः। * [தஸ்மாத் வா ஏதஸ்மாத் விஜ்ஞாநமயாத். அந்யோந்தர ஆத்மா ஆநந்தமய:] என்றவளவால் உபக்ராந்தமான ஆத்மோபதேச பரம்பரையானது ஆனந்தமயனில் ஸமாப்தி செய்யப்பட்

டிருக்கிறது. ஆகவே உபக்ரமிக்கப்பட்ட ப்ரஹ்மம் ஆநந்தமயனான ஆத்மாவே யென்று நிச்சயிக்கப்படுகிறது. அந்த ஆனந்தமய ஆத்மாவுக்கு * தஸ்யைஷ ஏவ ஶாரீர ஆத்மா * [தஸ்யைஷ ஏவ சாரீர ஆத்மா] என்ற உத்தரவாக்யத்தில் சரீரஸம்பந்தித்வமாகிற சாரீரத்வம் சொல்லப்பட்டிருக்கின்றது. கர்மபரவசனான ஜீவாத்மாவுக்கே கர்மபலாநுபவார்த்தமாக சரீர ஸம்பந்தம் ஸம்பவிக்கும்; அகர்மவச்யனான பரமபுருஷனுக்கு அது ஸம்பவிக்க நியாயமில்லை. ஆகவே சரீரஸம்பந்த முடையவனாக ஓதப்பட்ட இந்த ஆனந்தமயனான ஆத்மா ஜீவாத்மா வென்றே நிச்சயிக்கலாகிறது.

என்கிற பூர்வபக்ஷத்தின் மேல் ஸித்தாந்தம். நிருபாதிகமான ஆனந்த முடைமை முதலிய குணங்கள் ஜீவாத்மாவுக்கு ஸம்பவிக்கமாட்டாவாகையாலும், ஸகல சராசரங்களையும் சரீர மாகக் கொண்டவனாக வோதப்படுகின்ற பரமாத்மாவுக்கு அப்படிப்பட்ட ஸகல சரீரகத்வ மாகிற சாரீரத்வம் நன்றாக ஸம்பவிக்கக் கூடியதாதலால் நிருபாதிக ஆனந்த சாலியாகக் கடவன். ஆநந்தமய: என்றவிடத்திலுள்ள மயட்ப்ரத்யயத்திற்கு விகாரம் அர்த்தமாகை யாலே விகார மற்றவனான பரமாத்மாவுக்கு ஆநந்த விகாரத்வம் பொருந்தமாட்டா தென்கிற வாதமும் அநுபபந்நம்; மயட்டுக்கு விகாரமே அர்த்தம் என்கிற நிர்ப்பந்தமில்லை; "அந்நமயோ யஜ்ஞ:" என்று சொன்னால் அந்நவிகாரமென்று பொருளன்றே; இங்கு மயட்டுக்கு ப்ராசுர்யமேயன்றோ பொருள். (ப்ராசுர்யமாவது—மலிவு.) அன்னம் மலிந்த வேள்வி என்பது தானே பொருளாகிறது. இப்படியே இங்கும் 'ஆனந்தம் மலிந்தவன் பரமாத்மா' என்றே பொருள்படக் குறையில்லாமையாலே விகாரவாதம் அப்ரஸக்தம். அடுத்தபடியாக * யதோ வாசோ நிவர்த்தந்தே, அப்ராப்ய மநஸா ஸஹ, ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந், நபிபேதி குதஶ்சந * [யதோ வாசோ நிவர்த்தந்தே, அப்ராப்ய மநஸா ஸஹ, ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந், நபிபேதி குதச்சந] * என்று வாக்குக்கும் நெஞ்சுக்கு மெட்டாதபடி அப்ரமேயமான ஆனந்த முடையனாக வோதப்பட்ட பரமாத்மாவினிடத்திலேயே யன்றோ மலிந்த ஆனந்தமுடைமை தேறக்கூடியது.

இதற்குமேல் ஒருவாதம் தோன்றக் கூடும்; ஆநந்த ப்ராசுர்யமாவது ஆனந்தத்தினு டைய ஆதிக்யமே யாகும். ஆனந்தம் அதிகமென்று சொன்னால் ஆனந்த ப்ரதிகோடியான துக்கம் சிறிது உண்டென்று தோன்றியே தீருமல்லவா? [ஆதிக்ய மென்பது ப்ரதியோகியை அபேக்ஷித்திருக்குமாகையாலே எதைக் காட்டிலும் அதிகமென்று கேள்வியுண்டாக, துக்கத் திற்காட்டிலும் அதிகமென்று சொல்லியாக வேண்டுமாகையாலே ஆநந்தமயனென்று கொள்ளப்பட்ட பரம புருஷனிடத்தில் துக்க ஸம்பந்தம் இசையப்பட்டதாகவேயாயிற்று— என்றபடி.] ஏவஞ்ச, அகில ஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந மென்னப்படுகிற பரப்ரஹ்மத் தினிடத்தில் சிறிதளவுகூட ஹேயஸம்பந்தம் ஸம்பவிக்கமாட்டாதாகையாலே, ப்ரசுராநந்த சாலித்வமென்று பரிஷ்கரிக்கப்பட்ட ஆநந்த மயத்வமும் அங்குச் சொல்லுவதற்கில்லை என்பதாக.—இதுவும் பிசகு அந்த ஆனந்த ப்ராசுர்யத்தை விவரிக்கப் புகுந்த * ஸைஷா ஆநந்தஸ்ய மீமாம்ஸா பவதி * இத்யாதியான ஆநந்தமீமாம்ஸையில் * தே யே சதம் ப்ரஜாபதே ராநந்தா: * என்கிற வளவாக ப்ரஸ்தாவிக்கப்பட்ட சதுர்முகபர்யந்த ஸகலஜீவர்களின் ஆனந்தத்திற் காட்டிலும் நூறுமடங்கு அதிகமாயிருக்கையாகிற ப்ராசுர்யமே ஆநந்தமய சப்தத்தினால் விவக்ஷிதமாக விவரித்திருக்கையாலே ப்ரஸ்துதனான ஆநந்தமய ஆத்மாவில் ஆநந்தமயனென்கிற சொல்லிலிருந்து துக்க ஸம்பந்தம் ப்ரஸங்கிக்க வழியில்லை.

இவ்விடத்தில் ப்ராஸங்கிகமாக வொருவிஷயம் எழுதவேண்டியதாகிறது. மேலே அநுவதிக்கப்பட்டதொரு ஆக்ஷேபத்தைப் பரிஹரிக்கையில் பரம புருஷனுக்கு ஸ்வல்பதுக்க

ஸம்பந்தமும் கிடையாதென்று இங்கே நிர்வஹித்துவிட்டு, அந்தப் பரம புருஷனுடைய தயை யென்னும் குணத்தை நிரூபணம் செய்யுமிடத்து எம்பெருமான் அடியார்களின் துக்கத்தை யநுஸந்தித்துத் தானும் துக்கிப்பதுதான் தயாளுத்வமென்று ஸ்வாமி பாஷ்ய காரரே அருளிச் செய்ததாகக் காணப்படுகிறதே; இது எப்படி பொருந்தும்? எம்பெருமானிடத்தில் துக்கமுமுண்டு என்று இசைந்தால் ஆநந்தமயத்வம் கொள்வதற்கு இடமில்லாமலன்றோ இருக்கிறது—என்பதாக ஒரு சங்கை தோன்றக் கூடியதுண்டு. இதற்குப் பரிஹாரம் தெரிந்து கொள்ளவேண்டியது வேதாந்திகளுக்கு மிக அவசியமே. இப்படியொரு சங்கை தோன்றுமென்று ஸ்வாமி பாஷ்யகாரர் தாமே திருவுள்ளம்பற்றி இவ்வதிகரண ஸ்ரீ பாஷ்யத்தில் சில பங்க்திகளையருளிச் செய்திருக்கிறார்; அவற்றை அநுவதித்துக் காட்டிப் பொருளும் விவரித்துத் தெளிவு பிறப்பிக்கின்றோம்.

இவ்வதிகரணத்தில் இரண்டாவது ஸூத்ரம் * [illegible] * [விகாரசப்தாந் நேதி சேந் ப்ராசுர்யாத்] என்பது, இந்த ஸூத்ரத்தின் ஸ்ரீ பாஷ்யத்தில் மேல்வரும் பங்க்திகள் உள்ளன;—

“ [illegible] * [illegible] ” என்று.

இந்த ஸ்ரீ ஸூக்திகளின் தாற்பரியமென்ன வென்றால்; பரப்ரஹ்மத்தினிடத்தில் ஆனந்தம் அதிகமாக இருக்கிறது என்று சொல்வதனால் சிறிது துக்கமிருப்பதாகச் சொன்னதாகிறது என்கிற வாதம் பிசகு. ப்ரஹ்மத்தினுடைய ஆனந்தம் அபரிமிதம் என்றால் இவனுடைய ஆனந்தம் பரிமிதம் என்று இவ்வளவுதான் ஏற்படுமேயொழிய ப்ரஹ்மத்தினிடத்தில் ஸ்வல்ப துக்கமிருக்கிறது என்றும் சொன்னதாகத் தேறுவதற்கு வழியே யில்லை. துக்கம் இருக்கிறதோ இல்லையோ அது வேறு ப்ரமாணத்தினால் ஏற்படவேண்டுமே யொழிய ஆநந்த ப்ராசுர்யத்தைத் தெரிவிக்கிற ஆநந்தமய பதத்தினால் அது ஏற்படாது. ஆனந்தத்திற்கு ப்ரதிகோடியான வஸ்து ப்ரஹ்மத்தினிடத்தில் இல்லையென்பது * அபஹதபாப்மா * இத்யாதியான வேறு ச்ருதியினால் தெரிய வருகிறது. அதைப் பற்றி இங்கென்ன? இங்குத் தெரிந்து கொள்ளவேண்டிய விஷயம் இவ்வளவே–பரப்ரஹ்மத்தின் ஆனந்தம் அளவு கடந்ததென்றால் மற்றையோருடைய ஆனந்தம் இப்படியல்லாமல் அற்பமானது என்பதே தேறி நிற்கும்; அது ஆனந்த வல்லியில் ஸ்பஷ்டமாகவே தெரிவிக்கப்படுகிறது.—என்பதாக.

இங்கு ஸ்வாமி * அபஹதபாப்மா * என்கிற ச்ருதிவாக்யத்தை யெடுத்துக் காட்டியுள்ளார். அதன் கருத்தை ச்ருதப்ரகாசிகாசார்யர் நன்கு விவரித்துள்ளார். அதை உபநிஷத்பாஷ்யகாரரான ரங்கராமாநுஜஸ்வாமி, சாந்தோக்ய உபநிஷத்தில் * அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர் விசோக: * என்னுமிடத்துத் தம்முடைய பாஷ்யத்தில் விளக்கியுள்ளார். எங்ஙனே யென்னில்;

“ [illegible] ;.......... [illegible]

கர்மாணி தத்ஜ்ஞாச்லேஷ உபாயதே. அத ஈச்வரேண க்ருதாநி புண்யபாபஸஜாதீயாநி கர்மாணி நஸம்ஸாரஹேதுபூதாநி நஸக்தாநீத்யர்த:. அதோ தேவோ வா தத்ஜ்ஞோ ந ஸக்தோ ஹ்யலக்ஷண: கச்சித் ப்ராஸ்ய ஸ்வபாவவிசேஷ: ஸ்வபாவத ஏவ ॥ ”

என்பன அவருடைய பங்க்திகள். இதன் தாத்பர்யஸாரமாவது—பரமாத்மாவை **அபஹதபாப்மா** வென்று சொல்லுவதன் கருத்து பாபம் செய்யாதவனென்பதல்ல; பாபம் செய்தாலுங்கூட அதன் பலனுக ஹேயஸ்பர்சமுண்டாகப் பெறுதவனென்றபடி. பாபத்தைச் சொன்னது புண்யத்தையும் சொன்னபடியே. பகவான் புண்யபாபங்களைச் செய்தாலுங் கூட அவற்றின் பலன்கள் தன்மீது ஸம்பந்திக்கப் பெறுதவன் என்பதே இங்கு விவக்ஷிதம். பாபம் செய்தால் அதன்பலன் ஸம்பந்திக்காமல் எப்படியிருக்குமென்று கேட்கலாகாது; அதுதான் பகவானுடைய விலக்ஷணமான வொரு தன்மை என்பதாம். நம்போல்வார் பாபம் செய்தால் ஹேயஸம்பந்தமுண்டாகியே தீருகிறது. பகவானுக்கோ அப்படியில்லை. நாம் செய்கிற கருமங்கள் போன்ற கருமங்களைப் பகவானும் செய்வதுண்டு; செய்தாலும் அதனுல் அவனுக்கு ஹேயஸம்பந்த முண்டாவதில்லை. காரணமான கர்மமிருந்தால் கார்யமான ஹேயஸம்பந்தமில்லாமற்போகுமோவென்று சங்கிக்கக்கூடாது; இதுதான் பகவானுடைய விலக்ஷணமான வைபவம்.—என்று இவ்வளவும் உபநிஷத்பாஷ்யகாரருடைய நிரூபணங்கள். இவ்விஷயத்திற்கு **அந்தரதிகரணச்ருதப்ரகாசிகை**யையும் ஸம்வாதமாக எடுத்துக் காட்டியுள்ளார். **அபஹதபாப்மா** என்பது எந்த வாக்யத்திலிருக்கிறதோ அதேவாக்யத்தில் தான் **விசோக:** என்பதுமிருக்கிறது. அங்கும் இதே நியாயமாகத்தான் அர்த்தமாகும். சோகமுண்டானுலும் இதனுல் ஹேயஸம்பந்த முண்டாகப் பெறுதவன் என்றபடி. ஹேயமான சோகமன்றிக்கே கல்யாண குணங்களிற் சிறந்ததான சோகத்தையுடையவன் என்றதாகத் தேறும். எப்படியானுலென்ன? சோகமுள்ளதாக ஒப்புக்கொண்டுவிட்டால் அது ஆநந்தமயத்வத்திற்குக் கொத்தைதானே என்கிறவிந்த வாதத்தையே சிலர் செய்து கொண்டிருக்கலாம். அவர்கள், மேலே யெடுத்துக்காட்டிய உபநிஷத்பாஷ்ய பங்க்திகளில் “ **ஈச்வரேண க்ருதாநி புண்யபாபஸஜாதீயாநி கர்மாணி**” “ **க்ருதேபி பாபே** ” என்றுள்ள ஸ்ரீ ஸூக்திகளின் மேலும் ஓயாது சோத்யங்களைச் செய்து கொண்டிருக்கலாமத்தனை. இதைப்பற்றின விரிவு இங்கு இவ்வளவு போதுமென்று நிற்கின்றேம். இனி ப்ரக்ருதம் ப்ரஸ்தும:.

* **ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம. யோ வேத நிஹிதம் குஹாயாம் பரமே வ்யோமந். ஸோச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ. ப்ரஹ்மணு விபச்சிதேதி.** * என்கிற முந்தின வாக்யத்தில் ஜீவாத்மா ப்ரஹ்மத்தை யுபாஸித்து அந்த ப்ரஹ்மத்தையடைவதாகச் சொல்லியிருக்கையாலே, ஜீவாத்மா ப்ராப்தா வென்றும் பரமாத்மா ப்ராப்யனென்றும் இப்படி வாசி குறிப்பிடப் பட்டிருக்கிறது. இற்குமேல் ஒன்று சொல்லலாம்; பத்தாவஸ்தையிலுள்ள ஜீவன் ப்ராப்தாவாகிறன்; முக்தாவஸ்தையிலுள்ள அவனே ப்ராப்யனுகிறுன் என்று சொல்லக்குறையில்லாமையாலே ஜீவாத்மாவாகிய வொருவனுக்கே அவஸ்தா பேதத்தினுல் ப்ராப்த்ருத்வமும் ப்ராப்யத்வமும் கூடுமாகையாலே ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு இத்தால் பேதம் ஸித்திக்கவழியில்லை யென்று. இந்த வாதமும் பிசகு. **ப்ரஹ்மணு விபச்சிதா** * என்று ப்ராப்யமான ப்ரஹ்மத்திற்கு நிருபாதிகமான **விபச்சித்த்வம்** [அதாவது—ஸர்வஜ்ஞத்வம்] சொல்லப்பட்டிருக்கின்றது. அது ஜீவாத்மாவுக்கு முக்தாவஸ்தையிலும் ஸம்பவிக்கமாட்டாது. * **விபச்சிதா ப்ரஹ்மணு** * என்று சொல்லப்பட்ட விபச்சித்த்வமானது * **தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந ஆகாசஸ் ஸம்பூத:** * என்று அடுத்தபடியாகச் சொல்லப்படும் ஜகத்ஸ்ருஷ்டிக்கு உபயுக்தமான ஸர்வஜ்ஞத்வமன்றே.

(தொடரும்.)

கொண்டிருக்கையில், விசுவாமித்திரருடைய ஆக்னேயாஸ்திரமானது வஸிஷ்டர்மீது விழத் தொடங்கிற்று. ஆயினும் அதனுடைய வலிமை வஸிஷ்டரது பிரமதண்டத்தினால் அடக்கப் பட்டொழியவே விசுவாமித்திரர், வாருணம், ரௌத்ரம், ஐந்திரம், பாசுபதம் முதலிய பல பல அஸ்திரங்களை வஸிஷ்டர் மீது பிரயோகித்தும் சிறிதும் பயன்படாதொழிந்தது. அவர் தமது பிரமதண்டமொன்றினாலேயே இவருடைய ஸகலமான அஸ்திரங்களையும் வென்றொழித் தனர். அதன்பிறகு இவர் தமது பிரமாஸ்திரத்தைப் பிரயோகித்தனர். அப்போது தேவர் கந்தருவர் முதலாயினோர் மிக்க குழப்பமடைந்தனர்; மூவுலகும் நடுக்கமுற்றது. ஆயினும், வஸிஷ்ட முனிவர் அதனையும் தமது பிரமதண்டத்தினாலேயே தடை செய்து தவிர்த்தனர். அத்தருணத்தில் வஸிஷ்டருடைய உருவம் மிகவும் பயங்கரமாயிருந்தது. அவரது மயிர்க் கால்களினின்று நெருப்புப் பொறிகளும் கிளர்ந்தன. அப்போது முனிவர்கள் அவ் வஸிஷ் டரை மிகவும் புகழ்ந்து, உலக நன்மையின் பொருட்டு உமது தேஜஸ்ஸை அடக்கிக்கொள்ள வேண்டியது அவசியமென்று வணங்கி வேண்டிக்கொண்டனர். அவ்வேண்டு கோளுக்கு இரங்கி யிணங்கிய வஸிஷ்டர் அங்ஙனமே கோபசாந்தி பெற்று விளங்கினர். விசுவாமித்திரர் தாம் தோல்வியடைந்ததற்குப் பெருமூச்சு விட்டுத் தம்மைத் தாமே நொந்து கொண்டு "சீ! க்ஷத்ரிய பலம் ஒரு பலமா! பிராமண தேஜஸ்ஸின் பலமே பலம்!!; எல்லா அஸ்திரங்களும் ஒரு பிரமதண்டத்தினால் தொலைக்கப்பட்டொழிந்தனவே!; ஆதலால் இனி நான் பிராமணத் தன்மை பெறுதற்குரிய தவத்தை அனுட்டிப்பதே நன்று" என்று முடிவு செய்து கொண்டனர்.

[விசுவாமித்திரர் பிரம தேஜஸ்ஸைப் பெறுதற்குத் தென்திசையில் தவமியற்ற, அப்போது சரீரத் துடனே சுவர்க்கம் செல்ல விரும்பிய திரிசங்குமன்னவன் வஸிஷ்டரால் மறுக்கப்பட்டு அவரது புத்திரர்களிடத்தில் சென்று வேண்டினதைச் சதானந்தர் கூறுதல்.]

ராம! பிறகு இவ்விசுவாமித்திரர் வஸிஷ்ட முனிவர்மீது கொடிய பகை பாராட்டிக் கடுந்தவம்புரிந்து சித்தி பெறுதற்காகத் தமது மனைவியுடன் கூடித் தென்திசைக்குச் சென்று, ஆங்கு ஹவிஷ்யந்தர், மதுஷ்யந்தர், த்ருடநேத்ரர், மஹாரதர் என்ற புதல்வர்களைப் பெற்றனர். தவநிலையில் ஆயிரமாண்டு நிரம்பியபின்பு, நான்முகக்கடவுள் வந்து காட்சிதந்து 'இத் தவத்தின் பயனாக நீ ராஜரிஷியாயினை' என்றுரைத்து மீண்டு செல்ல, பிரமரிஷியென்கிற பட்டம் பெறவேணுமென்று தவம் புரிந்த தமக்கு 'ராஜரிஷி' என்கிற அந்தப்பட்டம் சிறிதும் மகிழ்ச்சியைத் தாராததினால் வெட்கங்கொண்டவிவர் மீண்டும் கொடுந்தவம் புரியத் தொடங் கினர். அக்காலத்தில், இக்ஷ்வாகு குலத்தவனான 'திரிசங்கு' என்கிற மன்னவனொருவன் மிகச் சிறந்த தர்மிஷ்டனாயிருந்து 'இப்போதுள்ள மானிடவுடலுடனே சுவர்க்கம் சென்று இன்பம் நுகரவேணும்' என்ற விருப்பமுடையனாய் அதற்காக ஒரு யாகம் நடத்த வேண்டி அவ்விருப்பத்தை வஸிஷ்ட முனிவரிடம் சென்று விண்ணப்பஞ் செய்துகொண்டனன். அங் ஙனம் நடத்த இயலாதென்று வஸிஷ்ட முனிவர் சொல்லிவிட, அவரது புத்திரர்களிருக்கு மிடம் தேடிச் சென்று, தென் திசையில் கடுந்தவம் புரிந்துகொண்டிருந்த அவர்கள் நூற்று வரையும் கண்டு வணங்கி, வந்த காரியத்தை விண்ணப்பஞ் செய்து, "உங்கள் தந்தையான வசிட்டரால் விலக்கப்பட்ட அடியேன் மீது மிகவும் கருணை புரிந்து நீங்கள் யாவரும் ஒன்று கூடி எப்படியாவது யாகத்தை நிறைவேற்றி இவ்வுடலுடன் யான் சுவர்க்கம் சென்றேனும் படி செய்வித்து மிக்க புகழ்பெறுவீர்களாக" என்று கேட்டுக்கொண்டனன்.

[வஸிஷ்ட புத்திரர்களாலும் மறுக்கப்பட்ட திரிசங்கு தான் விரும்பிய யாகம் செய்வித்தற் பொருட்டு விசுவாமித்திரரிடம் சரணாகதி செய்ததைச் சதானந்தர் கூறுதல்.]

ராம! இங்ஙனம் திரிசங்குமன்னவனால் பிரார்த்திக்கப்பட்ட வஸிஷ்ட புத்திரர்கள் அம்மன்னவனை நோக்கி "அடா அறிவு கேடனே! உண்மையை யுரைத்த குலகுருவான வஸிஷ்ட முனிவரை விட்டு வேறு புகல்தேடி எங்ஙனம் வந்தாய்? அவரால் முடியாதென்று கைவிடப்பட்ட காரியத்தை நாங்கள் எவ்வாறு செய்யமுடியும்? வீணான ஆசையை விட்டிட்டு வந்தவழியே திரும்பிப்போய்ச் சேருவாயாக" என்று சீற்றத்துடன் கூறினர். பிறகு அம்மன்னவன் நான் வேறு குருவையடைந்து என் மனோரதத்தை நிறைவேற்றிக் கொள்ளுகிறேன்; நீங்கள் சுகமாகவே வாழுங்கள் என்று சொல்லிப் புறப்படுகையில், வேறு குருவையடைவதாகச் சொன்ன சொல்லுக்கே மிகவும் சீறி 'நீ சண்டாளனாகக் கடவை' என்று அம்மன்னவனை வஸிஷ்ட புத்திரர்கள் சபித்துவிட்டார்கள். பிறகு ஓரிரவு சென்றவுடனே திரிசங்கு மன்னவன் சண்டாளத் தன்மையையடைந்து, உடம்பிலே சண்டாளனுடைய லக்ஷணங்களெல்லாம் அப்படியப்படியே விளங்க நின்றான். அன்னவனைக்கண்ட அவனது மந்திரிகள் முதலாயினோர் யாவரும் வெறுப்படைந்து கைவிட்டு அகன்றனர். பிறகு தனியாகவே அம்மன்னவன் விசுவாமித்திரரிடம் வந்து சரணமடைந்தனன். மிக்க பரிதாப நிலையில் நின்ற அவனை நோக்கி விசுவாமித்திரர் மிகவும் கருணை கொண்டனர். அவனுக்கு அபயப்பிரதானஞ் செய்து வரலாறுகளை யெல்லாம் விசாரிக்கையில், "ஸ்வாமின்! நான் பல யாகங்கள் செய்தும் சரீரத்துடனே சுவர்க்கம் செல்லுகையாகிற பலனை மாத்திரம் பெற்றிலேன்; நான் ஆபத்காலத்திலும் ஒருபொய்சொல்லி யறியாதவன், பலபல தருமங்கள் செய்திருக்கின்றேன்; பிரஜைகளை நெறி தவறாது பாதுகாத்திருக்கின்றேன்; மஹாத்மாக்களான குரவர்களை நன்கு ஆராதித்திருக்கின்றேன்; இப்படிப்பட்ட நான் எவ்வளவு வேண்டிக் கொண்டபோதிலும் கோரியவொரு யாகத்தைச் செய்விக்கவே முடியாதென்று எனது குருக்கள் கைவிட்டனர். உம்மைத் தவிர வேறுயாரையும் சரணமடையகில்லேன், உமது கிருபையினாலேயே எனது துயர் நீங்கி மனோரதமும் நிறைவேறவேணும்" என்று அம்மன்னவன் கேட்டுக்கொண்டனன்.

[திரிசங்கு விரும்பியபடி யாகத்தைச் செய்விக்க முயன்ற விசுவாமித்திரர் இதை நிந்தித்த மஹோதயர் முதலானவர்களுக்குச் சாபமிட்டதைச் சதானந்தர் கூறுதல்.]

ராமா! இங்ஙனம் திரிசங்குமன்னவனால் யாசிக்கப்பட்ட விசுவாமித்திரர் மிக்க அன்புடனே அஞ்சேலென்று கைகவித்துக்கொண்டே மறுமொழி கூறினர்; "வேந்தே! நீ மிகவும் தர்மிஷ்டன் என்பதை நான் அறிவேன்; உனக்கு நான் சரணமாகின்றேன்: இனி நீ சிறிதும் அஞ்சவேண்டா; அப்படியே யாகத்தை நடத்தி வைக்கின்றேன்; அதற்காக மஹரிஷிகளெல்லாரையும் நான் வரவழைக்கின்றேன்; யாகம் நடைபெறலாம்! குரு சாபத்தினாற் கிடைத்த இந்த சண்டாள வுருவத்தோடு கூடவே நீ சுவர்க்கம் சென்று சேரும்படி நான் செய்விக்கிறேன்" என்று சொல்லி உடனே தமது புத்திரர்களை யழைத்து யாகத்திற்கு வேண்டிய ஸந்நாஹங்களைக் குறையறச் செய்யும்படி கட்டளையுமிட்டனர். சிஷ்யர்களை யழைத்து, ரிஷிகள்முதலானவர்களை இந்த யாகத்திற்காக அழைத்துக்கொண்டு வரும்படி ஆஜ்ஞை செய்தனர். அழைக்கும்போது யாராவது அலக்ஷியமாக எது சொன்னாலும் அதை அப்படியே தம்மிடம் தெரிவிக்க வேணுமென்றும் கட்டளையிட்டனர். அப்படியே அனைவரையும் அழைத்து வருமாறு ஆங்காங்குச் சென்ற சிஷ்யர்கள் பல தேசங்களிற் போய்த்

தெரிவித்துவிட்டுத் திரும்பி வந்தார்கள். 'விசுவாமித்திரரே! உமது கட்டளையின்படி எல்லாரும் வந்துகொண்டிருக்கிறார்கள்; வஸிஷ்டருடைய குமாரர்கள் நூற்றுவரும் மஹோதயர் என்கிற ஒருவரும் சீற்றத்தோடு சில வார்த்தைகள் சொன்னார்கள்; அதாவது, யாகம் செய்து வைக்கும் அதிகாரம் பிராமணனுக்கே உள்ளதாயிருக்க, க்ஷத்ரியன் இதைச் செய்து வைக்கிறானே! அதுவும் சண்டாளனுக்குச் செய்து வைக்கிறானே? இது எப்படி நடக்கிறதோ பார்ப்போம்! அந்த யாகத்தில் கொடுக்கப்படும் ஹவிஸ்ஸைத் தேவர்களும் ரிஷிகளும் எங்ஙனம் கொள்ளுகின்றார்களோ பார்ப்போம் என்றனர்' என்று விண்ணப்பஞ் செய்து நின்றனர். அதுகேட்ட விசுவாமித்திரர் மிகவும் கோபமடைந்து "இங்ஙனம் தூஷணை செய்த துராத்மாக்கள் நீறாகியொழிய வேண்டும்; அவர்கள் இப்போதே காலபாசத்தாற் கட்டுண்டு யமன் மனையிற் புகுந்து வெகுகாலம் பிணத்தைப் பிடுங்கித் தின்பவர்களாயிருக்க வேண்டும்! 'முஷ்டிகர்கள்' என்கிற இழிகுலத்தோர்களாகி நாயின்மாமிசம் தின்பவர்களாய் இவ்வுலகங்களில் திரியவேண்டும்; மஹோதயனென்பவனும் என்னைத் தூஷித்ததற்காக வேடனாகப் பிறக்கவேண்டும்" என்றிவ்வாறு சாபமொழிகளைப் பெய்தனர்.

[விசுவாமித்திரர் திரிசங்குமன்னவனுக்கு அனுக்கிரகஞ்செய்த வரலாறு]

இராமா! வஸிஷ்ட புத்திரர்களையும் மஹோதயனென்பவனையும் இங்ஙனம் சபித்த விசுவாமித்திரர், அப்போது அழைத்தபடியே அவ்விடம் வந்துசேர்ந்த மஹரிஷிகளின் மத்தியில் "இக்ஷ்வாகு வம்சத்தில் தோன்றினவனும் தருமத்தில் மிகச்சிறந்தவனுமான திரிசங்கு மன்னவன் சரீரத்துடனே சுவர்க்கம் செல்ல விரும்பி அதற்குரிய யாகத்தைச் செய்விக்க வேணுமென்று என்னைச் சரணமடைந்து இதோ வந்திருக்கின்றான்; ஆதலால் இவனது மனோரதம் கைகூடுமாறு நீங்கள் யாவரும் என்னோடு சேர்ந்து இந்த யாகத்தை நன்கு நடைபெறுத்தவேணும்" என்று மொழிந்திட, முனிவர் யாவரும் கூட்டங்கூடி ஒருவர்க்கொருவர் 'இக்கௌசிகரோ மிகவும் கோபிஷ்டர்; இவருடைய சொற்களுக்கு நாம் இணங்கியிருக்கவே வேண்டும். இவருடைய கோபத்தீக்கு நாம் இரையாகத் தகாது; நாமும் இவரிடத்தில் சாபம் பெறலாகாது; இப்போது யாகத்தை நாம் நடத்திவைக்க வேண்டியதே நலம்; ஆகவே அவரவர்கள் உரிய ஸ்தானங்களில் இருக்கவேண்டும்' என்று பேசிக்கொண்டு அனைவரும் இணங்கி யிருக்க, அதுகண்டு உகந்த விசுவாமித்திரர், அந்த யாகத்தில் தாம் அத்வர்யுவாக இருந்தனர். நெறிமுறை தவறாது அவரவர்கள் ஸகல காரியங்களையும் ஒழுங்குபட நடத்தினர். பின்பு அந்த யாகத்தில் ஹவிஸ்ஸின் பகுதிகளைக் கொடுப்பதற்காகத் தேவர்களை அழைக்க, அவர்கள் ஒருவரும் வாராதிருக்கவே, மிக்க சீற்றங்கொண்ட விசுவாமித்திரர், ஹோமஞ்செய்கிற அகப்பையை உயரவெடுத்துக்கொண்டு திரிசங்குமன்னவனை நோக்கி "மன்னவனே! யாகம் கிடக்கட்டும்; நான் சேர்த்து வைத்திருக்கும் தவத்தின் மகிமையைப் பாராய்; எனது தவ வலிமையைக்கொண்டே இதோ உன்னை இவ்வுடலோடே சுவர்க்கம் சேர்ப்பிக்கின்றேன்காண்; அரசர்பெருமானே! நீ சரீரத்துடனே சுவர்க்கம் செல்லுக" என்று கூறினர். எல்லாரும் பார்த்துக் கொண்டிருக்கையில் அம்மன்னவன் அப்படியே சுவர்க்கத்திற்குச் சென்றனன். அப்போது தேவர்களோடு கூடிய இந்திரன், அங்ஙனம் மேல்நோக்கி வருகின்ற அம்மன்னவனைக் கண்டு வெகுண்டு 'அடா மூடனே' நீ குருசாபம் பெற்றுக் கெட்டுவிட்டாய்; ஆகலால் நீ சுவர்க்கத்திற்கு வரத் தகுதியுடையையல்லை; திரும்பி உன்னிடத்திற்கே போய்ச் சேருவாயாக; தலைகீழாக நிலத்தில் விழுவாயாக!! என்று கடுமையாகக் கூறினன். அவ்வண்ணமாகவே கீழ்முகமாக விழத் தொடங்கிய

திரிசங்குமன்னவன் விசுவாமித்திரரை நோக்கி "ஸ்வாமின்! என்னைக் காப்பாற்ற வேண்டும்" என்று கதறினன். அங்ஙனம் கதறுகின்ற கூக்குரலைக்கேட்டு விசுவாமித்திரர் மிக்க கோபங்கொண்டு மன்னவன் மீது அருள்புரிந்த சிந்தையுடனே 'அவ்விடத்திலேயே நிற்கக் கடவாய்' என்று கூறினர். உடனே 'உலகுக்கு இவரும் ஒரு ஸ்ருஷ்டிகர்த்தா' என்று சொல்லும்படி தாமும் ஒரு பிரமனைப் போன்று நூதன ஸ்ருஷ்டிகளைச் செய்யத் தொடங்கி வேறு ஸப்தரிஷிகளையும் வேறு நக்ஷத்திர மண்டலங்களையும் ஸ்ருஷ்டித்து விட்டார். அன்றியும் "வேறு இந்திரனையாவது ஏற்படுத்தி விடுகிறேன், அல்லது, சுவர்க்கம் இந்திரனற்றதாகவாவது [திரிசங்கு மன்னவனையே இந்திரனாகவுடையதாகவாவது] இருக்கட்டும்" என்று எண்ணிக்கொண்டு கோபத்துடன் தேவதைகளையும் ஸ்ருஷ்டிக்கத் தொடங்கினர். பிறகு தேவர்களும் அசுரர்களும் முனிவர்களும் மிகவும் அஞ்சி நடுங்கி விசுவாமித்திரரிடம் வந்து வணங்கி "மஹாநுபாவரே! இந்தத் திரிசங்குமன்னவன் குருசாபம் பெற்றுக் கெட்டனனாதலால் சரீரத்தோடு சுவர்க்கத்திற்கு வரத் தகுதியுடையவனல்லனே!; இதைத் தேவரீர் ஆலோசிக்க வேண்டாவா?" என்று வினயமாகவுரைத்தனர். அதுகேட்டு விசுவாமித்திரர் "தேவர்காள்! நீங்கள் சொல்லுவது யுக்தமே; ஆயினும் நான் திரிசங்கு மன்னவனுக்கு வாக்குத்தத்தம் செய்திருப்பதனால் அதற்குத் தவறாக நான் நடந்து கொள்ள இயலாது; நான் ஒருபோதும் பொய்யனாக ஆகமாட்டேன்; இம்மன்னவனுக்கு இவ்வுடலோடு கூடவே சாசுவதமான சுவர்க்கம் உண்டாகவேண்டும்; இப்போது நான் ஸ்ருஷ்டித்த நக்ஷத்திரங்கள் யாவும் நிலைபெற்றிருக்க வேண்டியவையே; நீங்கள் யாவரும் இதை ஒப்புக் கொள்ளவே வேண்டும்" என்றனர். அத்தேவர்கள் யாவரும் அதற்கு இணங்கவேண்டியதாகவே நிச்சயித்து "விசுவாமித்திரரே! நல்லது. அங்ஙனமே யாகுக; நீர் செய்த இச் செய்கைகள் யாவும் நிலை பெற்றிருக்கக் கடவன; நீர் படைத்த நக்ஷத்திரகணங்கள் யாவும் சோதி மண்டலத்திற்கு வெளியில் விளங்கட்டும், அங்கு இந்தத் திரிசங்கு மன்னவனும் தலைகீழாகவே இருந்துகொண்டு அமரர்களோடொப்ப அமர்ந்திருக்கட்டும்; இவன் தனது கோரிக்கை நிறைவேறப்பெற்றவனாகவே யிருக்கட்டும்; நக்ஷத்திரங்களும் இவனைத் தொடர்ந்து செல்லட்டும்" என்று அநுமதிபண்ணி, இவரை மிகவும் துதிசெய்து நின்றனர். யாகமும் முடிந்ததாகி அவரவர்கள் தத்தம் இருப்பிடம் போய்ச் சேர்ந்தனர்.

[விசுவாமித்திரர் புஷ்கரக்ஷேத்திரத்தில் தவஞ்செய்து கொண்டிருக்கையில் அம்பரீஷன் சுநச்சேபனை நரபலியாகப் பெற்றுவந்த கதையைக் கூறுதல்.]

ராமா! விசுவாமித்திரர் பிரமதேஜஸ்ஸை பெறுவதற்காகத் தவம் செய்துகொண்டிருக்கையில், இத்தகைய இடையூறு நேரிட்டதனால், இனி ஒருவகையான இடையூறும் நேராதபடி வேறொரு திசையிலே சென்று ஏகாந்தமாகத் தவம் புரியவேண்டுமென்று முனிவர்களிடம் சொல்லிவிட்டுப் புறப்பட்டுச் சென்று புஷ்கர தீர்த்தத்தின் கரையில் கோரமா தவஞ் செய்துகொண்டிருந்தார். அப்போதும் ஓர் இடையூறு நேர்ந்த கதையை இனிச் சொல்லுகிறேன் கேள். அயோத்திக்கரசனான அம்பரீஷனென்னும் மன்னவன் ஒரு யாகஞ் செய்கையில், இந்திரன் அந்த யாகப் பசுவைக் களவு முறையில் கவர்ந்து சென்றனன். பசு காணாமற்போய்விடவே, புரோகிதர் மன்னவனை நோக்கி, 'உனது சோர்வினால் யாகப் பசு காணாமற் போய்விட்டது; விரைவில் அதனைக் கண்டுபிடித்துக் கொண்டுவரவேணும்; அல்லது அதற்குப் பிரதியாக நரபலி கொடுப்பதற்கு ஒரு புருடனையாவது கொண்டுவர வேணும்; வேறு வகை யொன்றுமில்லை' என்று கூற, மன்னவன், பல்லாயிரம் பசுக்களைக்

கொடுத்து யாக பசுவைப் பெறுவதாக எண்ணி நாடுகளிலும் காடுகளிலும் நகரங்களிலும் ஓரிடமும் தப்பாமல் தேடிக்கொண்டு போகையில், ப்ருகுதுங்க மென்னும் மலையில் குடும்பத்தோடு வாழ்ந்துகொண்டிருந்த ரிசீகரென்பவரைக் கண்டு அவரைத் தெண்டனிட்டு "மஹாநுபாவரே! என்னுடைய யாகப்பசு காணமற் போயிற்று; பலவிடங்களில் திரிந்து தேடியும் கிடைக்கவில்லை; எனது யாகம் குறைபாடின்றி நிறைவேறவேண்டியிருத்தலால் பசுவுக்குப் பிரதியாக நரபலி கொடுத்தற் பொருட்டு உமது புதல்வர்களில் ஒருவனைக் கருணையோடு தந்திடவேண்டும்; என்னிடம் நூறாயிரம் பசுக்கள் பெற்றுக்கொண்டு ஒரு புத்திரனை விற்பனை செய்து என்னை க்ருதார்த்தனாக்கி யருளவேண்டும்" என்று வேண்டிக்கொண்டனன். அதற்கு அவர், "நீ எவ்வளவு கொடுத்தாலும் நான் எனது மூத்த குமாரனைக் கொடுக்கமாட்டேன்" என்று உறுதிகூறிவிட்டார். அம்மொழியைக் கேட்டுக்கொண்டிருந்த அவரது மனைவி அம்பரீஷனை நோக்கி, "மன்னவனே! எனக்கு இளைய குமாரன்மீது மிகவும் அன்பாதலால் அவனை நான் விற்கமுடியாது என்று தெரிந்துகொள்" என்று கூறினள். இம்மொழிகளைக் கேட்டுக்கொண்டிருந்த இடைக்குமாரனாகிய சுநச்சேபனென்பவன் உடனே தானாகவே எழுந்துவந்து "மன்னவனே! எனது தந்தையோ மூத்த மகனை விரும்பினர்; தாயோ இளையமகனை விரும்பினள்; என்னை ஒருவரும் விரும்பாமையினால் நான்தான் விற்கப்பட்டேனாகிறேன்; ஆதலால் என்னை யழைத்துக்கொண்டு போகலாம்" என்று அம்பரீஷனிடம் கூறினன். மன்னவனும் நூறாயிரம் பசுக்களை விலையாகத் தந்து அப் புதல்வனைப் பெற்றுக்கொண்டு பெரு மகிழ்ச்சியுடன் புறப்பட்டுத் தேரின்மீது அக் குமாரனை ஏற்றிக்கொண்டு சென்றனன்.

[சுநச்சேபன் புஷ்கரத்தில் விசுவாமித்திரரைச் சரணமடைந்து உய்ந்த வரலாறு.]

ராகவ! இங்ஙனம் சுநச்சேபனை விலைக்கு வாங்கிச்சென்ற அம்பரீஷர் நடுப்பகலில் புஷ்கர க்ஷேத்திரத்தில் இளைப்பாறத் தங்கினர். அப்போது சுநச்சேபன் புஷ்கர க்ஷேத்திரத்தில் மகரிஷிகளோடு கூடத் தவஞ்செய்துகொண்டிருக்கும் தனது மாதுலனான விசுவாமித்திரரைக் கண்டனன். அவன் தனது மனவருத்தத்தைச் சொல்லிக்கொண்டே அவரது மடியில் வந்து விழுந்து, "ஸ்வாமீ! எனக்குத் தாயுமில்லை, தந்தையுமில்லை; உம்மையே புகலாகப் பற்றுகின்றேன்; நீரே அருள் புரிந்து அடியேனைக் காத்தருளவேண்டும்; அம்பரீஷ மன்னவனுடைய யாகமும் குறையற நிறைவேறி நானும் உயிர்வாழ்ந்திருக்கும் வண்ணம் கருணைபுரிய வேண்டும்" என்றனன். அதுகேட்ட விசுவாமித்திரர் அப்போதே தமது புதல்வர்களாகிய மதுஷ்யந்தன் முதலானவர்களை யழைத்து, 'தந்தையின் கட்டளைப்படி நடக்கவேண்டியது உங்களுக்குக் கடமையன்றோ; உங்களுடைய நற்குணம் வெளியாவதற்கு இப்போது நல்ல சமயம் நேர்ந்திருக்கின்றது; இந்த சுநச்சேபனுக்கு நான் அபயப்பிரதானம் பண்ணியிருக்கின்றேனாதலால் என்னுடைய வாக்கு மெய்ம்மை பெறுமாறு உங்களில் ஒருவன் அம்பரீஷ மன்னவனுடைய யாகத்திற்குப் பசுவாக இருந்து இவனை உயிர்வாழ்விக்க வேணும்' என்றனர். அதுகேட்டு அப்புதல்வர்கள் பரிகாசமான பதிலுரையைக் கூறி அக்கட்டளைக்கு இணங்காதொழிந்தனர். அதனால் மிக்க சீற்றங்கொண்ட விசுவாமித்திரர் முன்பு வஸிஷ்டபுத்திரர்களுக்குப் போலவே இவர்களுக்கும் சாபம் கொடுத்துவிட்டு, மிகவும் வாடின முகத்தோடு நிற்கின்ற சுநச்சேபனுக்கு அஞ்சேலென்று கைகவித்து அவனுக்கு இரண்டு மந்திரங்களைச் செவியில் உபதேசித்து "பிள்ளாய்! அம்பரீஷ மன்னவனுடைய யாகத்தில் நீ பசுவாக இருக்க நேரும்போது அங்கு இவ்விரண்டு மந்திரங்களையும் பாடினு

யாகில் உயிர்வாழப்பெறுவாய்" என்று சொல்லி நியமிக்க, அவ்வுபதேசத்தைப் பெரு மகிழ்ச்சியோடு பெற்றுக்கொண்டு அம்பரீஷனிடம் வந்து சேர்ந்த சுநச்சேபன் அம்மன்னவனோடுகூட விரைவாக யாகசாலைக்கு வந்து சேர்ந்தனன். யாகப்பசுவுக்குச் செய்ய வேண்டிய கோலங்களை யெல்லாம் இவனுக்குச்செய்து யூபஸ்தம்பத்தில் இவன் கட்டப்பட்டனன். அப்போது விசுவாமித்திருடைய உபதேச மொழியின்படியே அவ்விரண்டு மந்திரங்களையும்பாடி இந்திரன் உபேந்திரன் என்ற இரண்டு தேவதைகளையும் தோத்திரம் செய்து தெய்வானுக்கிரஹத்தினால் தீர்க்காயுள் பெற்றனன். மன்னவனது யாகமும் குறையின்றியில் நிறைவேறி சுநச்சேபனும் ஆயுள் பெற்றுக்களிக்கும்படியாக இங்ஙனம் அருள்புரிந்த விசுவாமித்திரர் அந்தப் புஷ்கர க்ஷேத்திரத்தில் ஆயிரமாண்டு தவநிலையில் ஊன்றியிருந்தனர்.

[விசுவாமித்திரர் தவப்பயனாகப் பிரமனருளால் ரிஷிபட்டம் பெற்றும் திருப்திபெறாமல் மீண்டும் தவம்செய்ய, அப்போது மேனகைவந்து தவத்தைக்கெடுக்க, பிறகு வடதிசை சென்று கடுந்தவம்புரிந்து மஹரிஷிபட்டம்பெற்றும் மீளாமல் பெருந்தவமியற்றியவரலாறு.]

ஆயிரமாண்டு நிறைந்து தவம் முடிவுபெற்றபின் விசுவாமித்திரருக்குப் பேறு அளிக்க வானவர்கள் அனைவரும் அங்கு வந்தனர். வானவர்தலைவராய நான்முகக் கடவுள் விசுவாமித்திரரை நோக்கி 'நீர்செய்த தவத்தின் பயனாக ரிஷியானீர்' என்று சொல்லிவிட்டு அமரர்களோடு தன்னுலகம் மீண்டு சென்றனர். அவ்வளவிலும் திருப்தியடையாத விசுவாமித்திரர் மீண்டும் கோரமாதவம் புரியத்தொடங்கினர். வெகுகாலஞ்சென்றபின் ஒருநாள் மேனகையென்னும் தேவமாது புஷ்பகரக்ஷேத்திரத்திற்கு வந்து நீராடுகையில் அவளை விசுவாமித்திரர் கண்ணுற்றுக் காமபரவசராகி இனிய மொழிகளாலே அம்மடந்தையைத் தனது ஆச்ரமத்திற்கு வந்து சேரும்படி செய்துகொண்டனர். பத்து வருஷகாலம் அவளோடு கூடியிருந்து காலங்கழித்த விசுவாமித்திரர் ஒருநாள் கழிவிரக்கங்கொண்டு 'அந்தோ! என்ன காரியம் செய்தோம்'! என்று தம்மைத்தாமே வெறுத்து, 'தவநிலைக்கு இடையூறு செய்ய நினைத்த தேவர்களின் மாயையினால் நேர்ந்த பிழை இது' என்று துணிந்து கடுங்கோபங்கொண்டிருக்கையில் அஞ்சி நடுங்கிக் கைகூப்பி நின்ற அவ்வமர மங்கையைச் சபியாமல் இனிய சொற்களையே சொல்லியனுப்பிவிட்டு இமயமலைக்குச்சென்று சேர்ந்தார். அங்குக் கௌசிகீ நதியின் கரையிலே மிக்க பயங்கரமாகத் தவம்புரியத் தொடங்கினர். ஓராயிரமாண்டு அங்ஙனம் செல்லுகையில் இனி என்னாகுமோவென்று தேவர்கள் அஞ்சி முனிவர்களுடன் பிரமனைச்சென்று சார்ந்து "ஸ்வாமின்! விசுவாமித்திரருக்கு மஹரிஷி யென்கிறபட்டம் அளிப்பதே நலம்" என்று கூறியழைத்தார்கள். அப்படியே அளிக்க இணங்கிய நான்முகப் பெருமான் விசுவாமித்திரரிடம் வந்து சேர்ந்து 'அப்பா உனது கடுந் தவத்தினால் மகிழ்ச்சி பெற்ற யான் உனக்கு மஹரிஷி என்கிற பட்டப்பெயர் தந்திட்டேன்' என்ன; அதுகேட்ட அவர் களிப்புமின்றி வருத்தமுமின்றிக் கைகளைக் கூப்பிக்கொண்டு 'பெருமானே! உமது திருவாக்கினால் என்னை மஹரிஷியென்றபோதே நான் ஜிதேந்திரியனாகின்றேனென்று கொள்ளலாமன்றோ! என்றார்; அதற்குப் பிரமன் 'இப்போது நீர் இந்திரியங்களை வென்றவராக ஆகின்றீரல்லீர்; இன்னமும் அதற்குரிய முயற்சி செய்யவேண்டும்' என்று சொல்லிவிட்டுத் தன் இருப்பிடம் சென்றனன். பிரமனோடு தேவர்கள் யாவரும் புறப்பட்டுப் போனபின் விசுவாமித்திரர் முன் செய்த தவங்களனைத்திலும் மிகக் கொடியதோர் தவத்தை இயற்றத்தொடங்கிக் கைகளை உயரவெடுத்து அந்தரத்தில் நின்று, வெய்யிற்காலத்தில் தீயிடை நின்றும் குளிர்காலத்தில் நீர்நிலைகளில் நின்றும் இரவுபகல் வாசியற இங்ஙனம் ஆயிர

மாண்டளவும் கோரமாதவம் செய்தனர். அதுகண்டு தேவாதி தேவனான இந்திரன் நடுக்க முற்று அரம்பையென்னும் வேசியை நோக்கி 'நங்காய்! காமவிகாரமடையும்படி விசுவாமித்திரரைக் கலங்கச்செய்ய வேண்டுவது உனது கடமை, தேவர்கட்காக இக்காரியம் நீ தான் செய்யத்தகும்' என்ன, அவள் முனிவனிடம் அச்சத்தினால் அது முடியாதென்று பணிந்துகூற, அதற்கு இந்திரன், "மாதர்க் குயர்ந்தவளே! நீ அஞ்சவேண்டா, என் சொற்படி செய்! நானும் வஸந்தருதுவில் குயிலுருவம் தரித்துக் காமனையும் துணை கொண்டு உன்னருகில் ஒரு மரத்தில் வந்து சேர்வேன்; உன் அழகினாலே விசுவாமித்திரரை ஈடுபடுத்தித் தவநிலையைக் குலைத்துவிடு" என்று துணிவுகூறிப் புறப்படச் செய்தனன். அவளும் புறப்பட்டு மேலான அலங்காரங்கள் செய்துகொண்டு பலவகைச் சிங்காரங்களால் விசுவாமித்திரரை மயக்க வாரம்பித்தாள். அதனைநோக்கிய விவர் 'இது இந்திரனுடைய மாயை போலும்' என்றெண்ணி, பதினாயிரமாண்டு கல்லாய்க் கிடக்கும்படி அவ்வரம்பையைச் சபித்து 'பிறகு வஸிஷ்ட முனிவர் தவ வலிமையால் உன்னை இச் சாபத்தினின்றும் விடுவிப்பார்' என்று சாப விடையும் கூறினர். இங்ஙனம் கடுஞ்சினங்கொண்டு சாபங்கொடுத்தவர், அந்தோ! கோபத்திற்கு ஆளாயினேனே! என்று கழிவிரக்கம் கொண்டார்.

இவரது சாபத்தின்படி ரம்பை கல்லாகியொழிந்தனள். குயிலாக வந்த இந்திரனும் துணையாக வந்த மன்மதனும் அஞ்சியோடிப்போயினர். பிறகு விசுவாமித்திரர் 'இனி யார் எது செய்யினும் நான் சிறிதும் சீற்றங்கொள்ளாமலே யிருக்கவேண்டும். கோபத்தினால் தவநிலை குன்றுதலால் நமது இஷ்டஸித்தி தாமதித்தே போகின்றது; இனி இப்படி ஆக வொண்ணாது' என ஒருவாறு மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு, "பிரமரிஷியென்கிற பட்டம் பெறுமளவும் நான் ஐம்புலன்களையும் வென்று சரீரத்தை வாட்டிவிடக்கடவேன்; நாலுண்டாலும் மூச்சுகூட விடாமலிருப்பேன்" என்று சங்கற்பஞ் செய்துகொண்டார்.

[விசுவாமித்திரர் வடதிசையைவிட்டுக் கீழ்த்திசையிற்சென்று கடுந்தவம் புரிந்து தம் இஷ்டம் நிறைவேறப் பெற்றதைக் கூறிமுடித்தல்.]

ராமா! இங்ஙனம் மிகக்கடினமான வுறுதியுடன் வடதிசையைவிட்டுக் கீழ்த்திசை சென்ற விசுவாமித்திரர் ஆயிரமாண்டளவும் மிகக்கொடிய தவம் புரிந்தனர். அப்போது அந்தத் தவநிலைக்குப் பலபல இடையூறுகள் உண்டாகியும் மனம் திடமாயிருந்ததனால் உறுதியுடனே நீண்ட தவமியற்றிமுடித்த விசுவாமித்திரர் அன்னபாரணை செய்யப்புகுங்கால் இந்திரன் அந்தண வேடத்துடன் வந்து அணுகி அவ்வன்னத்தைத் தனக்குத் தந்திடுமாறு இரந்தனன். அப்படியே அவ்வன்னம் முழுவதையும் அவனுக்குத் தந்திட்டு அப்போதும் கோபங்கொள்ளாமல் வாளாஇருந்திட்டார். மீண்டும் ஆயிரமாண்டு மூச்சுவிடாமல் தவஞ் செய்துகொண்டிருந்த அவ்விசுவாமித்திரரது சிரத்தில்நின்று புகைகிளரத் தொடங்கிற்று. அதனால் மூவுலகமும் நடுக்கமும் தாபமும் உற்றது. பிறகு கந்தருவர் தேவர் அசுரர் அரக்கர் முதலாயினோர் அனைவரும் ஒளிகுறைந்து மதிமயங்கி மிக்க துயரத்துடனே நான்முகக் கடவுளிடம் வந்து, "ஸ்வாமின்! விசுவாமித்திரரது தவக்கனல் பொறுக்கமுடியாததா யிருக்கின்றது; எவ்வகையான இடையூறு செய்யப்பார்த்தும் அத்தவம் சிறிதும் முட்டுப்படாது மேன்மேலும் கோரமாகவே வளர்ந்து செல்கின்றது; அப்பெரியவர் கோரும் பலன் எதுவோ, அதனை உடனே அவர்க்கு அளித்திடுதல் நன்று; இல்லையேல் அவரது தவத்தினால் மூவுலகும் விரைவில் நாசமடைந்திடும்போல் காண்கிறது; பிரமதேவனே! திசைகள் யாவும் இருள்மூடி ஒளிமழுங்கிவிட்டன; கடல்கள் யாவும் கலங்கிவிட்டன; மலைகள்

வெடிக்கின்றன; நானிலம் நடுங்குகின்றது; மற்றுமுள்ள விபரீத நிலைமைகள் வாய் கொண்டு பேச வொண்ணாதவை; இவ்விஷயத்தில் பரிஹார மொன்றும் அறிகின்றிலோம்; மேன்மேலும் விபரீதங்கள் முற்றுவதற்கு முன்னமே அம்முனிவர்க்கு நீர் அனுக்கிரஹம் செய்து முடிக்கவேண்டும்" என்று ஒருமிடறாக முறையிட்டனர். பின்பு அக்கூட்டங்களுடன் விசுவாமித்திரரிடம் வந்து சேர்ந்த நான்முகக் கடவுள் அவரை நோக்கி, "பிரமரிஷியே! உமது கடுந்தவத்தினால் மிகவும் களிப்புற்றோம்; நீர் பிராமணத்தன்மையை அடைந்தவராய்விட்டீர்; உமக்கு நீண்ட ஆயுளையும் நல்கினேன்; இனி நீர் தவத்தை விட்டிடல் வேண்டும்" என்றுரைக்க; அதுகேட்டுப் பெருமகிழ்ச்சி கொண்ட விசுவாமித்திரர் தெண்டனிட்டு "பிராமணத்தன்மையும் நீண்டவாணாளும் எனக்குத்தந்தது உண்மையாயின், ஓங்காரமும் வஷட்காரமும் வேதங்களும் என்னை வரிக்கவேண்டும்; [அதாவது வேதங்களை ஓதுவித்தல், வைதிகக்கிரியைகளைச் செய்வித்தல் முதலிய அதிகாரங்கள் யாவும் எனக்கு வரவேண்டும்.] வானவர்காள்! வஸிஷ்ட முனிவரும் இங்கேவந்து தமது வாக்கினால் என்னைப் பிரமரிஷி யென்று கூறவேண்டும்; இங்ஙனே எனது கோரிக்கைகள் நிறைவேறப் பெறுமாயின் நீங்கள் புறப்பட்டுப் போகலாம்" என்றனர். பிறகு வஸிஷ்ட மாமுனிவர் வானவர்களால் வேண்டிக் கொள்ளப்பட்டு விசுவாமித்திரரிடம் வந்து நேசம் செய்துகொண்டு "உம்மைத் தேவர்கள் யாவரும் ஒப்புக்கொண்டபடி நானும் பிரமரிஷி யென்றே ஒப்புக்கொண்டேன்" என்று இசைந்து இயம்பினர். பிறகு அவரவர்கள் தத்தம் இருப்பிடங்கள் சென்று சேர்ந்தனர். இராமபிரானே! இம்முனிவரால் இங்ஙனம் அரும் பெருந் தவத்தின் பயனான அந்தணமை அடையப்பட்டது; இவருடைய பெருமை சொல்லி முடிக்கற்பாலதன்று—என்று இவ்வண்ணமாக விசுவாமித்திரரது சரிதைகளைச் சதானந்த முனிவர் இராமனுக்குக் கூறி முடித்தனர்.

இவ்வளவும் கேட்டுக்கொண்டிருந்த ஜனக சக்ரவர்த்தி இவ்வளவு பெருமைவாய்ந்த மாமுனிவர் தசரத புத்திரர்களோடுங்கூடத் தன்னில்லத்திற்கு எழுந்தருளி அனுக்கிரகஞ் செய்ததுபற்றித் தன்னுடைய ஆனந்தமிகுதியை அடிக்கடி விஞ்ஞாபனஞ் செய்துகொண்டு, அப்போது சூரியன் அஸ்தமிக்குங் காலம் ஆனதனால் மீண்டும் மறுநாள் காலையில் சந்திப்பதாகக் கூறி விசுவாமித்திரரிடம் விடைபெற்றுத் தன் இருப்பிடம் சார்ந்தவளவில், அம்முனிவரும் தாசரதிகளுடன் தம்விடுதியிற் சென்று சேர்ந்தனர். ... ... *

வான்மீகி ராமாயணத்தில் விச்வாமித்ர சரித்ரகீர்த்தன

கட்டம் முற்றிற்று.

ஸ்ரீ:

# முகவுரை

திவ்வியப்பிரபந்தப் பூஞ்சோலையிலிருந்து பறித்த பூக்கள் பல; இங்கு அவை கண்ணன் திருவிளையாட்டை அணி செய்கின்றன. அவ்விளையாட்டில் தம்மை இழந்த ஆழ்வார்களின் பெருமை விளங்கவே, இம்மாலை தொடுக்கப்பட்டிருக்கின்றது.

செந்தமிழ்ச்செல்வர் ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் பிரதிவாதிபயங்கரம் ஸ்ரீ உ. வே. அண்ணங்கராசாரியர் ஸ்வாமியவர்களின் நன் முயற்சியினால் இவ்விரண்டாம் பதிப்பு வெளியாகின்றது. ஸ்வாமியவர்களுக்கும், ஊக்க மளித்த நண்பர்களுக்கும் மனமார்ந்த நன்றி.

அன்பன்

**சே. ரங்கஸ்வாமி**

21-2-1949

* * *

# முன்னுரை

ஸ்ரீமான் சே. ரங்கஸ்வாமி ஐயங்காரென்னும் பக்த சிகாமணி "முத்தும் மணியும் வயிரமும் நன்பொன்னுந் தத்திப்பதித்தாற் போல்" அமைத்துள்ள பாசுரப்படி ஸ்ரீ பாகவதத்தைக் கண்ணுற்றுப் பெருமகிழ்ச்சிகொண்டேன். முற்காலத்தில் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீராமாயண கதைகளை மாத்திரம் இங்ஙனே தொடுத்தருளினர். ஸ்ரீ க்ருஷ்ண பிரானுடைய கதைகளுக்கு அத்தகைய அமைப்பு இல்லாதிருந்தவோர் குறையை இந்த பக்த சிகாமணி மூலமாய் எம்பெருமான் தீர்த்துக் கொண்டது எம்மனோரது நல்வினைப் பயனேயாம். இதனை முகபாடஞ்செய்து பக்தர்கள் நித்தியானுசந்தானஞ் செய்வது மிகவும் ஏற்கும்.

இங்ஙனம்,

காஞ்சீபுரம் பிரதிவாதிபயங்கரம்,

**அண்ணங்கராசாரியர்,**

(வேத வேதாந்த வைஜயந்தீ பாடசாலைத் தலைவர்)

15-9-1934.

ஸ்ரீ :

# அருளிச்செயல் பாகவதம்

---

| க்ஷீராப்தி வைபவம் | பாசுரக் குறிப்பு | |
|---|---|---|
| பாலாலிலையில் துயில் கொண்ட பரமன் | நாய்ச்சியார் | 13-2 |
| மன்னிய நாகத்தணை மேலோர் மாமலைபோல் | பெரியதிருமடல் | 2 |
| சுடராழி சங்கிருபால் பொலிந்து தோன்றத் | பெரியதிரு | 2-10-9 |
| திருமடந்தை மண்மடந்தை யிருபாலுந் திகழ | ,, | 3-10-1 |
| ஆயிரந்தோள் பரப்பி முடியாயிர மின்னிலக்க் | பெரியாழ் | 4-3-10 |
| கடலோதம் கால் அலைப்பக் | முதல் | 16 |
| கடலோன் கைமிசைக் கண் வளர்வது போல் | திருவாசிரியம் | 1 |
| உன்னிய யோகத்துறக்கம் தலைக்கொண்டு | பெரியதிருமடல் | 8 |
| இணையில்லா இன்னிசையாழ் கெழுமி இன்பத் | | |
| தம்புருவும் நாரதனு மிறைஞ்சி யேத்தக் | பெருமாள் | 1-5 |
| கொந்தலர்ந்த நறுந்துழாய் சாந்தம் தூபம் | | |
| தீபங் கொண்டமரர் தொழப் | பெரியதிரு | 2-10-2 |
| பத்தர்களும் பகவர்களும் பழமொழிவாய் முனிவர்களும் | | |
| சித்தர்களும் தொழுதிறைஞ்ச | பெரியாழ் | 4-9-6 |
| அருள் கொண்டாடும் அடியவரின்புற | கண்ணி | 8 |
| ஏழுலகுந் தனிக்கோல் செல்ல வீற்றிருந்து, | திருவாய் | 4-5-1 |

## அவதார காரணம்

| | | |
|---|---|---|
| விண்கொள் அமரர்கள் வேதனை தீர | பெரியாழ் | 1-2-16 |
| மண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்யப் | பெருமாள் | 1-10 |
| பாரேறு பெரும் பாரந்தீரத் | பெரியதிரு | 2-10-8 |
| துவரிக்கனிவாய் நிலமங்கை துயர்தீர | பெரியதிரு | 8-8-9 |
| மண்ணின் பாரம் நீக்குதற்கே | | |
| வேண்டித் தேவரக்கச் | திருவாய் | 6-4-5 |
| சாது சனத்தை நலியுங் கஞ்சனைச் சாதிப்பதற்கு | ,, | 3-5-5 |
| என்ன நோன்பு நோற்றாள் கொலோ இவனைப் பெற்ற | | |
| [வயிறுடையா ளென்னும் வார்த்தை யெய்துவிக்கத் | பெரியாழ் | 2-2-6 |
| தந்தை காலில் பெருவிலங்கு தாளவிழ | பெரிய | 7-5-1 |
| மக்களறுவரைக் கல்லிடை மோத இழந்த | பெரியாழ் | 5-3-1 |
| தாயைக்குடல் விளக்கம் செய்யக் | திருப்பாவை | 5 |

## அவதாரம்

| | | |
|---|---|---|
| கதிராயிர மிரவி கலந்தெரித்தா லொத்து | பெரியாழ் | 4-1-1 |
| மல்லை மூதூர் வடமதுரையில் | திருவாய் | 9-1-6 |
| மத்தக்களிற்று வசுதேவர் தம்முடைச் | | |
| சித்தம் பிரியாத தேவகிதன் வயிற்றில் | | |
| அத்தத்தின் பத்தாநாள் தோன்றிக் | பெரியாழ் | 1-2-6 |

| | பாசுரக் குறிப்பு | |
|---|---|---|
| கஞ்சன் வலைவைத்தவன்று காரிருள் எல்லிற் பிழைத்து | நாய்ச்சியார் | 3-9 |
| எடுத்த பேராளன் நந்த கோபன்றனின் னுயிர்ச் சிறுவ [னென்னக் | திருவாய் | 8-1-3 |
| கூர்வேல் கொடுந் தொழிலன் நந்தகோபன் குமரனைத் | திருப்பாவை | 1 |
| தெய்வ நங்கை யசோதைக்குப் | பெருமாள் | 7-5 |
| போத்தந்த பேதைக் குழவியாய்ப் | பெரியாழ் | 1-2-1 |
| பலதேவற் கோர் கீழ்க்கன்றாய் | நாய்ச்சியார் | 41-1 |
| ஆயர்கள் நாயகனாய் | பெரியாழ் | 1-5-11 |
| ஆயர்பாடிக்கு அணிவிளக்காய்க் | ,, | 2-2-5 |
| கொம்பனார்க் கெல்லாம் கொழுந்துக்குங் கொழுந்தாய் | திருப்பாவை | 17 |
| காண்டலின்றிக் | திருவாய் | 6-4-5 |
| கொண்டு வளர்க்கக் குழவியாய்த்தான் வளர்ந்து | இரண்டாய் | 98 |

## ஆயர்பாடியில் மங்களங் கொண்டாடல்

| | | |
|---|---|---|
| எண்ணெய் சுண்ணம் எதிரெதிர் தூவிடப் | பெரியாழ் | 1-1-1 |
| பாடுவார்களும் பல்பறை கொட்ட | ,, | 1-1-2 |
| அண்டர் மிண்டிப் புகுந்து நெய்யாட | ,, | 1-1-5 |
| அயலிடத்துப் பேர்ந்து, | பெரிய | 10-5-4 |
| தத்துக் கொண்டாள் கொலோ! தானே பெற்றாள் | | |
| சித்த மனையாள் அசோதை யென்னப் [கொலோ! | பெரியாழ் | 2-1-7 |
| பேணிச்சீருடைப் பிள்ளை | ,, | 1-1-3 |
| ஒருத்தி மகனா யொளித்து வளரத், | திருப்பாவை | 25 |

## பூதனை வதம்

| | | |
|---|---|---|
| தீமனத்தான் கஞ்சனது வஞ்சனையில் திரியும் | பெரிய | 3-10-7 |
| பெண்மை மிகு வடிவு கொடு | ,, | 3-9-6 |
| வன்பேய்ச்சி தன் மகனாகத்தான் முலையுண்ணக் கொடுக்க | ,, | 10-4-7 |
| முலையுண்பான் போலே முனிந்துண்டு | இரண்டாந் | 8 |
| வஞ்சனத்து வந்த பேய்ச்சி யாவி பாலுள்வாங்கிச் | திருச்சந்த | 43 |
| சூருருவின் பேயளவு கண்டு, | முதல் | 3 |

## சகட பங்கம்

| | | |
|---|---|---|
| மாணிக்கங் கட்டி வயிர மிடை கட்டி | பெரியாழ் | 1-3-1 |
| ஆணிப்பொன்னாற் செய்த வண்ணச் சிறுத்தொட்டிலில் | ,, | 1-2-5 |
| உறங்குவான் போலே கிடந்து | பெரியாழ் | 1-2-3 |
| நாள்களோர் நாலைந்து திங்களளவிலே | | |
| தானே நிமிர்த்து | ,, | 1-2-11 |
| உருளும் சகட முதைத்து, | திருவாய் | 2-1-8 |

## கண்ணனுக்கு நாமகரணஞ் செய்தல்

| | | |
|---|---|---|
| ஆய்ப் பாடியாயர் | பெரியாழ் | 1-1-4 |
| பத்து நாளுங் கடந்த விரண்டா நாள் | | |
| எத்திசையும் சயமரங் கோடித்துக் | ,, | 1-1-8 |
| கருவடிவிற் செங்கண்ண வண்ணன்றன்னை | திருநெடுந் | 3 |

| | பாசுரக் குறிப்பு | |
|---|---|---|
| வேதம் வல்லார்களைக் கொண்டு | திருவாய் | 4-6-8 |
| கார்முகிலே ! யென் கண்ணா ! | ,, | 2-3-7 |
| செங்கணெடுமால் சிரீதரா வென்றழைத்து | பெரியாழ் | 4-6-2 |
| நாவினால் நவிற்றின்ப மெய்த,— | கண்ணி | 2 |

## பால லீலைகள்

| | | |
|---|---|---|
| மாயக் கூத்தன் | திருவாய் | 8-5-1 |
| தன் முகத்துச்சுட்டி தூங்கத் தூங்கத் தவழ்ந்து போய்ப் | பெரியாழ் | 1-4-1 |
| பொன்முகக் கிண்கிணியார்ப்பப் புழுதியளைந்து, | | |
| கோல நறும் பவளச் செந்துவர் வாயினிடைக் | ,, | 1-5-9 |
| கோமள வெள்ளி முளைப்போல் சில பல்லிலகக் | | |
| கணகணசிரித்து வந்து முன் வந்து | ,, | 1-7-4 |
| நின்று முத்தந்தந்து | | |
| ஆயர்கள் போரேறுய்ச் செங்கீரையாடி, | ,, | 1-5-2 |
| எண்ணெய்க் குடத்தை யுருட்டி இளம்பிள்ளை கிள்ளி [யெழுப்பிக் | ,, | 1-4-11 |
| கண்ணைப்புரட்டி விழித்துக் கழைகண்டு செய்து, | பெரியாழ் | 2-4-6 |
| வெண்ணெய் விழுங்கி விரைய வுறங்கி, | ,, | 2-5-3 |
| பாணையிற் பாலைப் பருகிக் பற்றாதாரெல்லாஞ் சிரிப்ப | ,, | 2-7-1 |
| மடங்கொள் மதிமுகத்தாரை மால் செய்து, | ,, | 2-7-7 |
| அழகிய வாயிலமுத வூறல் தெளிவுறா | ,, | 1-4-5 |
| மழலை முற்றாத இளஞ்சொல்லால் | | |
| வானிலா வம்புலீ ! சந்திரா ! வாவென்று | ,, | 1-6-4 |
| அம்புலி விளித்து, | ,, | 1-4-3 |

## யசோதை, பிள்ளைவாயுள் வையமேழுங் கண்டது

| | | |
|---|---|---|
| மண்ணும் மலையும் கடலும் உலகேழும் | ,, | 1-2-18 |
| உண்ணும் திறந்து மகிழ்ந்து, | | |
| கையும் காலும் நிமிர்த்துக் கடார நீர் | ,, | 1-1-6 |
| பைய வாட்டிப் பசுஞ்சிறு மஞ்சளால் | | |
| ஐய நாவழித்தாளுக்கு அங்காந்திட | | |
| வாயுள் வையமேழுங் காண | | |
| ஆடியாடி யசைந்தசைந்திட்டு அதனுக் கேற்ற கூத்தையாடி, | ,, | 2-2-10 |

## யசோதை கண்ணனை உரலிற் கட்டுதல்

| | | |
|---|---|---|
| வாங்கக்குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள் | திருப்பாவை | 3 |
| நீங்காத செல்வம் நிறைக்க, | | |
| வெள்ளிமலை யிருந்தாலொத்த வெண்ணெயைத் | பெரிய | 10-7-9 |
| தாயர் மனங்கள் தடிப்ப | ,, | 10-5-2 |
| உளங்குளிர வமுது செய்து | ,, | 3-9-7 |
| விரலோடு வாய் தோய்ந்த வெண்ணெய் கண்டு | முதல் | 24 |
| ஒளியா வெண்ணெ யுண்டானென்று உரலோடு ஆய்ச்சி | பெரிய | 6-7-4 |
| விளியா ஆர்க்க ஆப்புண்டு விம்மியழுது, [ஒண்கயிற்றால் | | |
| பொத்தவுரலைக் கவிழ்த்து அதன்மேலேறித் | பெரியாழ் | 1-10-7 |

| | | பாசுரக் குறிப்பு |
|---|---|---|
| தித்தித்த பாலும் தடாவினில் வெண்ணெயும் | | |
| மெத்தத் திருவயிறு ஆர விழுங்கி, | | |
| சீரால் அசோதை | பெரியாழ் | 2-3-13 |
| அன்புற்று நோக்கி யடித்தும் பிடித்தும் அனைவர்க்கும் [காட்ட | ,, | 2-3-8 |
| ஊரார்க ளெல்லாருங் காணக் | சிறியதிருமடல் | 35 |
| கண்ணி நுண் சிறுத்தாம்பினால் கட்டுண்டு | கண்ணி | 1 |
| பெருமா வுரலில் பிணிப்புண்டிருந்து | பெரியாழ் | 1-2-10 |
| விண்ணெல்லாங் கேட்க வழுது | ,, | 2-3-6 |
| எழில்கொள் தாம்பு கொண்டடிப்பதற்கு எள்கி, | பெருமாள் | 7-8 |

## மருத மரங்களை முறித்தது

| | | |
|---|---|---|
| மணமருவு தோளாய்ச்சி ஆர்க்கப் போய் உரலோடும் | பெரிய | 8-3-4 |
| ஒருங்கொத்த இணைமருதம் உன்னிய வந்தவரை | பெரியாழ் | 1-6-5 |
| ஊருகரத்தினொடும் உந்தி | | |
| எண்டிசையோரும் வணங்க | | |
| இணை மருதூடு நடந்திட்டு, | பெரிய | 3-3-3 |

## மாடு கன்றுகளை மேய்த்தல்

| | | |
|---|---|---|
| அழகிய பைம் பொன்னின் கோல் அங்கைக் கொண்டு | | |
| கழல்கள் சதங்கை கலந்தெங்கும் ஆர்ப்ப | | |
| மழகன்றினங்கள் மறித்துத் திரிந்து, | பெரியாழ் | 1-3-20 |
| புகழ்ப் பலதேவனென்னும் தன் நம்பி யோடப் பின் [கூடச் சென்று, | ,, | 1-8-5 |
| தன்நேர் ஆயிரம் பிள்ளைகளோடு தளர்நடையிட்டு, | ,, | 3-1-1 |
| வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டு [அதனோசை கேட்டு, | பெரியாழ் | 2-9-1 |
| அசல் அகத்தார் பரிபவம் பேச | ,, | 2-9-2 |
| இல்லம் புகுந்தவர் மகளைக்கூவிக் கையில் வளையைக் [கழற்றிக் கொண்டு | | |
| கொல்லையினின்றுங் கொணர்ந்து விற்ற அங்கொருத்திக்கு [அவ்வளை கொடுத்து | ,, | 2-9-10 |
| நல்லன நாவற் பழங்கள் கொண்டு, | | |
| பறவைகள் பின் சென்று கானஞ்சேர்ந்துண்டு | திருப்பாவை | 28 |
| இட்டமான பசுக்களை இனிது மறித்து நீருட்டி | | |
| விட்டுக்கொண்டு விளையாடி, | நாய்ச்சியார் | 14-1 |
| கணங்களோடு மின் மேகங் கலந்தாற்போல் வனமாலை | | |
| மினுங்க நின்று விளையாடி, | ,, | 14-2 |
| கோவலனாய் ஆநிரைகள் மேய்த்துக் குழலூதிக் | மூன்றாம் | 42 |
| கோவிந்தன் வருகிற கூட்டங் கண்டு | | |
| மழை கொலோ வருகின்றதென்று சொல்லி மங்கைமார் [சாலகவாசல்பற்றி நுழைய குழல்களுங் கீதமுமாகி | பெரியாழ் | 3-4-1 |
| முற்றத்தூடு புகுந்து தன்முகங் காட்டிப் புன் முறுவல் [செய்து | நாய்ச்சியார் | 2-9 |

| | பாசுரக் குறிப்பு | |
|---|---|---|
| பஞ்சிய மெல்லடிப் பிள்ளைகளுடன் | | |
| வைத்த நெய்யுங் காய்ந்த பாலும் வடிதயிரும் நறு | | |
| [வெண்ணெயு மித்தனையும் பெற்றறியாமே | பெரியாழ் | 2-2-2 |
| ஆயிரநாழி நெய்யைப் பாகந்தான் | | |
| வையாதுண்டு, | பெரிய | 10-7-10 |

## வத்ஸாஸுர பகாஸுர வதம்

| | | |
|---|---|---|
| கானக வல்விளவின் காயுதிரக் கருதிக் | | |
| கன்றது கொண்டெறிந்து, | பெரியாழ் | 1-6-4 |
| பள்ளத்தில் மேயும் பறவையுருக் கொண்டு | | |
| கள்ளவசுரன் வருவானைத்தான் கண்டு | | |
| புள்ளிதுவென்று பொதுக்கோ வாய் கீண்டிட்டு, | ,, | 2-5-4 |

## தேனுகாசுர வதம்

| | | |
|---|---|---|
| வாசியாகி நேசமின்றி வந்தெதிர்ந்த தேனுகன் | | |
| நாசமாகி நாளுலப்ப நன்மைசேர் பனங்கனிக்கு | திருச்சந்த | 80 |
| வீசி மேல் நிமிர்ந்த தோளிலில்லையாக்கி, | | |

## காளிய மர்த்தனம்

| | | |
|---|---|---|
| ஆய்ச்சிமார்களும் ஆயரும் அஞ்சிடப் | நாய்ச்சியார் | 4-4 |
| பூத்த நீள் கடம்பேறித் | | |
| தடம்படு தாமரைப் பொய்கை கலக்கி | பெரியாழ் | 2-10-3 |
| விடம்படு நாகத்தை வால்பற்றி யீர்த்துப் | | |
| படம்படு பைந்தலை மேலெழப் பாய்ந்திட்டு | | |
| உடம்பை யசைத்து | ,, | 3-9-9 |
| வேயின் குழலூதி வித்தகனாய் நின்று | ,, | 3-9-7 |
| நீண்முடி யைந்திலும் நின்று நடஞ்செய்து, | நாய்ச்சியார் | 12-7 |

## பிரலம்ப வதம்

பாண்டி வடத்தில்
பிலம்பன்றன்னைப் பண்ணழியப் பலதேவன் வெல்ல

## கண்ணன் காட்டுத்தீயை விழுங்கல்

| | | |
|---|---|---|
| நின்ற செந்தீமொண்டு சூறை நீள்விசும்பூடு இரியக் | பெரிய | 1-7-5 |
| காண்கின்ற வெந்தீயெல்லாம் யானே யென்று | திருவாய் | 5-6-3 |
| தான் விழுங்கி யுய்யக் கொண்டு, | பெரிய | 11-6-7 |

## கண்ணன் வேணுகானஞ் செய்தல்

| | | |
|---|---|---|
| வள்ளி நுடங்கிடை மாதர் வந்தலர் தூற்றிடத் | பெரியாழ் | 3-2-7 |
| துள்ளி விளையாடித் தோழரோடு | | |
| கானகம்படி யுலாவி யுலாவிச் | ,, | 3-6-4 |
| சிறு விரல்கள் தடவிப் பரிமாறச் செங்கண் கோடச் | ,, | 3-6-8 |
| [செய்யவாய் கொப்பளிப்பக் | | |
| குறுவெயர்ப் புருவம் கூடலிப்பக் | | |

| | பாசுரக் குறிப்பு | |
|---|---|---|
| கோவலர் சிறுமிய ரிளங்கொங்கை குதுகலிப்ப | | |
| மேனகையொடு திலோத்தமை யரம்பை உருப்பசியரவர் [வெள்கி மயங்கி | பெரியாழ் | 3-6-4 |
| நன்னரம்புடைய தும்புருவோடு நாரதனும் தந்தம் வீணை [மறப்பப் | ,, | 3-6-5 |
| பறவையின் கணங்கள் கூடு துறந்து வந்து சூழ்ந்து படுகாடு [கிடப்பக் | ,, | 3-6-8 |
| கறவையின் கணங்கள் கால் பரப்பிட்டுக் கவிழ்ந்திறங்க | | |
| மருண்ட மான்கணங்கள் மேய்கை மறந்து மேய்ந்த புல்லுங் [கடைவாய் வழி சோர | | |
| இரண்டு பாடும் துலுங்காப் புடை பெயரா | ,, | 3-6-9 |
| எழுது சித்திரங்கள் போல நிற்க | | |
| மரங்கள் நின்று மதுதாரைகள் பாய | | |
| மலர்கள் வீழ வளர் கொம்புகள் தாழக் | ,, | 3-6-10 |
| கோவிந்தனுடைய கோமள வாயில் | | |
| குழல் முழஞ்சுகளினூடு குமிழ்த்துக் | | |
| கொழித்திழிந்த அமுதப்புனல் தன்னை | | |
| குழல் முழவம் விளம்பக் கோவலனாய்க் குழலூதியூதி, | ,, | 3-4-4 |

## கோபியர் வஸ்திராபஹரணம்

| | | |
|---|---|---|
| மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளில் | திருப்பாவை | 1 |
| கோழியழைப்பதன் முன்னம் குடைந்து நீராடுவான் போந்த | நாச்சியார் | 3-1 |
| பங்கய நீர் குடைந்தாடுகின்றார்கள் ஆயர் மடமக்களைப் [பின்னே சென்றொளித்திருந்து | | |
| அங்கவர் பூந்துகில் வாரிக் கொண்டிட்டு அரவேரிடை யார் [இரப்ப | | |
| மங்கை நல்லீர் வந்து கொண்மினென்று மரமேறி யிருந்து | பெரிய | 10-7-1 |
| கன்னியரோடு எங்கள் நம்பி கரிய பிரான் விளையாடி, | நாச்சியார் | 3-10 |

## வேள்வி மங்கையர் போக்கியான்னம் சமர்ப்பித்தது

| | | |
|---|---|---|
| பத்த விலோசனத்தில் | | |
| வேர்த்துப் பசித்து வயிறசைந்து வேண்டடிசிலுண்டு | ,, | 12-6 |

## கோவர்த்தனத்தைக் குடையாக எடுத்தது

| | | |
|---|---|---|
| இந்திரனுக் கென்று ஆயர்களெடுத்த எழில் விழவில் பழ [நடைசெய் | | |
| மந்திர விதியில் பூசனை பெறாது | பெரிய | 2-3-4 |
| இமயப் பெருமலை போல் | | |
| அமைத்த சோறது வெல்லாம் | ,, | 4-2-3 |
| போயிருந்தங் கொரு பூதவடிவு கொண்டு | | |
| முற்ற வாரி வளைத்துண்ண, | ,, | 10-7-7 |
| மேலை யமரர்பதி மிக்கு வெகுண்டுவர | | |
| காளநன் மேகமவை கல்லொடு கார்பொழிய | பெரியாழ் | 1-6-2 |
| வண்ணமால் வரையே குடையாகச் | பெரியாழ் | 5-1-8 |
| செந்தாமரைக்கை விரலைந்தினையும் | ,, | 3-5-6 |

பாசுரக் குறிப்பு

கப்பாக மடுத்து மணி நெடுந்தோள் — பெரியாழ் 3-5-6
காம்பாகக் கொடுத்துக்
கல்லெடுத்துக் கன்மாரி காத்து — திருநெடுந் 13

### கண்ணன் கோபியரோடு விளையாடல்

மங்கல நல் வனமாலை மார்வில் இலங்க மயில் தழைப் [பீலி சூடிப்
பொங்கிள வாடை யரையிற் சாத்திப் பூங் கொத்துக் [காதிற் புணரப் பெய்து
கொங்கு நறுங்குழலார்களோடு குழைந்து குழலினிதூதி, — பெருமாள் 6-9
கொல்லைமை செய்து குரவை பிணைந்து, — திருவாய் 4-2-2
சுழலக் குடங்கள் தலை மீதெடுத்துக் கொண்டாடி, — பெரியதிருவந் 31
மன்றமரக் கூத்தாடி மகிழ்ந்து — திருநெடுந் 16
தேனும் பாலுங் கன்னலும் அமுதுமாகித் தித்தித்து, — திருவாய் 8-8-4
முற்று இளையார் விளையாட்டொடு
காதல் வெள்ளம் விளைவித்து — பெரிய 3-8-8

### கேசிவதம்

மாவாயின் அங்கம் மதியாது கீறி, — ,, 3-2-8

### கண்ணனும் பலராமனும் மதுரைக்கு எழுந்தருளல்

வில்லார் விழவில் வடமதுரை விரும்பி — ,, 6-7-5

### கூனியினுடைய கூனலை நிமிர்த்தல்

நாறிய சாந்தம் நமக்கிறை நல்கென்னத் — பெரியாழ் 1-9-4
தேறி அவளும் திருவுடம்பில் பூச
ஊறிய கூனினை உள்ளொடுங்க அன்று ஏற வுருவி,

### குவலயாபீட வதம்

விற்பிடித்திறுத்து, — பெரியாழ் 4-7-7
வளவெழுந் தவளமாட மதுரைமா நகரந் தன்னுள் — திருமாலை 45
வெம்பு சினத்து அடல் வேழம் வீழ
வெண் மருப்பு ஒன்று பறித்து, — பெரிய 2-2-8

### மல்லர் வதம்

இருமலை போல் எதிர்ந்த மல்லர் இருவர் — பெரியாழ் 2-2-8
வலிய முடியிடிய வாங்கி — பெரியதிருவந் 41

### கம்ஸ வதம்

செம்பொனிலங்கு வலங்கை வாளி
திண்சிலை தண்டொடு சங்க மொள்வாள்
உம்பரிரு சுடராழியோடு
கேடக மொண்மலர் பற்றித் — பெரிய 2-8-3
தொட்ட படை யெட்டும் தோலாத வென்றியான் — மூன்றும் 99
கறுத்திட்டெதிர் நின்ற — பெரியாழ் 2-6-3

| | பாசுரக் குறிப்பு | |
|---|---|---|
| கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்று | திருப்பாவை | 25 |
| அரையனை எழப் பாய்ந்துதைத்துக் | பெரியாழ் | 4-7-7 |
| குஞ்சி பிடித்தடித்து | பெரிய | 3-10-3 |
| உயிரது வுண்டு | ,, | 3-10-9 |
| அவன் மாளக் கண்டு, | திருக்குறுந் | 1 |

### சாந்தீபினியின் புத்திரனை மீட்டுக்கொடுத்தது

| | | |
|---|---|---|
| மாதவத்தோன் புத்திரன் போய் மறிகடல்வாய்மாண்டானை | பெரியாழ் | 4-8-1 |
| ஓதுவித்த தக்கணையா வுருவுருவே கொடுத்து, | | |

### ருக்மிணி பரிணயம்

| | | |
|---|---|---|
| கண்ணாலங் கோடித்துக் கன்னி தன்னைக் கைப் பிடிப்பான் | நாய்ச்சியார் | 11-9 |
| திண்ணார்ந்திருந்த சிசுபாலன் தேசழிந்து | | |
| அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக் கைப்பிடித்து | | |
| உருப்பிணி நங்கையைத் தேரேற்றிக் கொண்டு | பெரியாழ் | 3-9-3 |
| விருப்புற்று அங்கேக விரைந் தெதிர்வந்து | | |
| செருக்குற்றான் வீரம் சிதையத் தலையைச் சிரைத்து | | |
| அன்று அங்கு அமர் வென்று நங்கையணி நெடுந்தோள் [புணர்ந்து | திருவாய் | 7-10-6 |
| ஏடிலங்கு தாமரை போற் செவ்வாய் முறுவல் செய் | பெரிய | 7-5-6 |
| திருவுக்கும் திருவாகிய செல்வனைப் [தருளித் | ,, | 7-7-1 |
| பெண்ணமுதுண்டு, | ,, | 6-1-2 |

### ஏழ்விடை செற்றுப் பின்னையை மணந்தது

| | | |
|---|---|---|
| துப்புடையாயர்கள் தம் சொல் வழுவாதொரு கால் | | |
| தூயகருங் குழல் நல்தோகை மயிலனைய | | |
| நப்பினை தன் திறமா நல்விடை யேழவிய | பெரியாழ் | 1-4-7 |
| வீயப் பொருது வியர்த்து நின்று, | ,, | 4-1-4 |

### நரகாசுர வதம்

| | | |
|---|---|---|
| மன்னு நரகன் தன்னைச் சூழ்போகி வளைத் தெறிந்து | | |
| கன்னி மகளிர் தம்மைக் கவர்ந்து, | ,, | 4-3-3 |

### துவாரகை ஏற்படுத்தியது

| | | |
|---|---|---|
| பதினாறும் ஆயிரவர் தேவிமார் பணி செய்யத் துவரை | | |
| அதில் நாயகராகி வீற்றிருந்து, [யென்னும் | ,, | 4-9-4 |

### பாரிஜாதாபஹரணம்

| | | |
|---|---|---|
| என்னுதன் தேவிக்கு அன்று இன்பப்பூ ஈயாதாள் | | |
| தன்னுதன் காணவே தண்பூ மரத்தினை | | |
| வல்நாதப் புள்ளால் வலியப் பறித்துக் | ,, | 3-9-1 |
| கற்பகக்காவு கருதிய காதலிக்கு | | |
| இப்பொழுது ஈவனென்று இந்திரன் காவினில் | | |
| நிற்பன செய்து நிலாத்திகழ் முற்றத்துள் | | |
| உய்த்து, | பெரியாழ் | 2-1-9 |

பாசுரக் குறிப்பு

### வாணனுயிரந் தோள் துணித்தது

மாவலி தன்னுடைய மகன்வாணன் மகளிருந்த
காவலைக் கட்டழித்துப் — பெரியாழ் 4-3-4
பரிவின்றி வாணனைக் காத்துமென்று அன்று படை [யொடும் வந்தெதிர்ந்த
திரிபுரஞ் செற்றவனும் மகனும் பின்னும் அங்கியும் போர் [தொலையப்
பொரு சிறைப்புள்ளைக் கடாவிப் — திருவாய் 3-10-4
பொருகடலை யரண் கடந்து புக்கு — திருநெடுந் 20
மாயப் பொருபடை வாணனை ஆயிரந்தோளும் பொழி [குருதி
பாய ஆழி சுழற்றி, — திருப்பல்லாண்டு 7

### பௌண்ட்ரக வாசுதேவ பங்கம்

புகராருருவாகி முனிந்தவனைப் புகழ்வீட முனிந்து [உயிருண்டு அசுரன்
நகராயின பாழ்பட நாம மெறிந்து — பெரிய 2-4-7
காய் சினத்த காசி மன்னன்
நாச முற்று வீழ நாள் கவர்ந்து, — திருச்சந்த 107

### சிசுபால வதம்

கேட்பார் செவிசுடு கீழ்மை வசவுகளே வையும்
சேட்பாற் பழம் பகைவன் சிசுபாலன் திருவடி [தாட் பாலடையப் — திருவாய் 7-5-3
பெருந்துன்பம் வேரற நீக்கித்தன் தாளிணைக்கீழ்ச் [சேர்த்துப் — திருவாய் 7-5-10

### தந்த வக்கரனை முடித்தல்

பொங்கரவ வக்கரனைக் கொன்று, — மூன்றும் 21

### திரௌபதி கண்ணனைச் சரணமடைதல்

அந்தகன் சிறுவன் அரசர் தமரசற் கிளையவன் அணி [யிழையைச் சென்று
"எந்தமக் குரிமை செய்" எனத்தரியாது "எம் பெரு [மான் ! அருள்" என்ன — பெரிய 2-3-6

### கண்ணன் விச்வ ரூபமெடுத்தது

பங்கயக் கண்ணன் — திருவாய் 3-4-6
ஒன்றே யுரைப்பான் ஒரு சொல்லே சொல்லுவான்
துன்று முடியான் துரியோதனன் பக்கல் சென்று, — பெரியாழ் 2-6-4
கோதை வேல் ஐவர்க்காய் மண்ணகலம் கூறிடுவான்
தூதனாய் மன்னவனாற் சொல்லுண்டு, — பெரிய 11-5-7
அரவு நீள் கொடியோன் அவையுள் ஆசனத்தை [யஞ்சிடாதேயிட அதற்குப் — ,, 9-1-8

பாசுரக் குறிப்பு

பெரிய மாமேனி யண்டம் ஊடுருவப் பெருந்திசை — பெரிய 9-1-8
[யடங்கிட நிமிர்ந்து,
ஊரொன்று வேண்டிப் பெறாத வுரோடத்தால் — பெரியாழ் 2-6-5
மண்மிசைப் பெரும்பாரம் நீங்கவோர் பாரதமாப் — திருவாய் 6-4-10
[பெரும்போரில்

### பார்த்தன் தேரில் கண்ணன் பாகனாய் நின்றது

பற்றலர் வீயக் கோல் கையில் கொண்டு பார்த்தன் தன்
[தேர்முன் நின்று — பெரிய 2-3-1

### அர்ச்சுனன், கண்ணனது சேவடிமேல் அர்ச்சித்த பூவைச் சிவபிரான் முடியிற் கண்டது

தீர்தனுலகளந்த சேவடி மேற் பூந்தாமம்
சேர்த்தி அவையே சிவன் முடிமேல் தான் கண்டு
பார்த்தன் தெளிந்தொழிய — திருவாய் 2-8-6

### கீதை யுபதேசம்

அறிவினாற் குறைவில்லா அகன்ஞாலத் தவரறிய
நெறியெல்லா மெடுத்துரைத்து — ,, 4-8-6
நீர்மையில் நூற்றுவர்வீய ஐவர்க்கருள் செய்து நின்று, — ,, 3-5-7

### ஜயத்ரதனை மடித்தது

ஆழி கொண்டன்று இரவி மறைப்பச் சயத்திரதன்
[தலையைப்
பாழிலுருளப் படைபொருது, — பெரியாழ் 4-1-8

### பரிக்ஷித்தை உயிர் மீட்டருளியது

மருமகன் தன் சந்ததியை உயிர்மீட்டு மைத்துனன்மார்
உருமகத்தே வீழாமே குருமுகமாய்க் காத்து, — ,, 4-8-3
எல்லாச் சேனையும் இரு நிலத்து அவித்து — திருவாய் 3-2-3
சந்தம் அல்குழலாள் அலக்கண் நூற்றுவர் தம்
[பெண்டிருமெய்தி நூலிழப்ப, — பெரிய 2-3-6
மைத்துனன்மார் காதலியை மயிர் முடிப்பித்து — பெரியாழ் 4-9-6
[அவர்களையே மன்னாக்கி,

### வைதிகன் பிள்ளைகளை மீட்டுக் கொடுத்தல்

வேதவாய் மொழி யந்தணன் ஒருவன் "எந்தை நின்
[சரண், என்னுடை மனைவி
காதல் மக்களைப் பயத்தலும் காணாள் கடிய தெய்வங்
[கொண்டொளிக்கும்" என்றழைப்ப, — பெரிய 5-8-8
இடரின்றியே ஒருநாள் ஒரு போழ்தில் எல்லா வுலகுங்
[கழியப்
படர்புகழ்ப் பார்த்தனும் வைதிகனும் உடனேறத் — திருவாய் 3-10-5
[திண் தேர் கடவிச்

பாசுரக்குறிப்பு

சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியில் வைதி [கன் பிள்ளைகளை
உடலொடுங் கொண்டு கொடுத்து, — திருவாய் 3-10-5

### ஆதியஞ் சோதி யுருச் சேர்தல்

துயரில் சுடரொளி தன்னுடைச் சோதி நின்ற வண்ணம் [நிற்கவே
துயரில் மலியும் மனிசர் பிறவியில் தோன்றிக் காண்காண [வந்து
துயரங்கள் செய்து தன் தெய்வ நிலையுலகிற் புகவுய்த்துக் — ,, 3-10-6
கதையின் திருமொழியாய் நின்று, — இரண்டாம் 64
நல்குரவும் செல்வும் நரகும் சுவர்க்கமுமாய்
வெல்பகையும் நட்பும் விடமும் அமுதமுமாய்ப்
பல் வகையும் பரந்து — திருவாய் 6-3-1
வைகுந்தம் புகுதலும், — ,, 10-9-9
எண்மர் பதினொருவர் ஈராறுவர் ஓரிருவர்
வண்ண மலரேந்தி வைகலும் நண்ணி
ஒரு மாலையால் பரவி ஓவாது எப்போதும் — முதல் 52
மால்வண்ணன் தாள் தாமரை யடைவோமென்று — நான்முகன் 91
மறை கொண்ட மந்திரத்தால் வாழ்த்திச் — ,, 9
சூட்டு நன்மாலைகள் தூயனவேந்தி — திருவிருத்தம் 21
ஏதமில் தண்ணுமை எக்கம் மத்தளி
யாழ்குழல் முழவமோடு இசை திசை கெழுமிக்
கீதங்கள் பாடி மயங்கித் திருவடி தொழ, — திருப்பள்ளி 9
பாடுநல் வேதவொலி பரவைத்திரை போல் முழங்க, — திருவாய் 5-9-3
ஆயிரம் பெயரால் அமரர் சென்றிறைஞ்ச, — பெரிய 5-7-6
உவந்த உள்ளத்தனாய் — அமலன் 2
அண்டமாய் எண்டிசைக்கும் ஆதியாய் நீதியான
பண்டமாம் பரம சோதியாய் — திருக்குறு 11
ஆடரவமளியில் அறிதுயிலமர, — திருவெழு
இடங்கொள் சமயத்தை யெல்லாம் எடுத்துக் களைவன [போலே
தடங்கடல் பள்ளிப்பெருமான் தன்னுடைப் பூதங் [களேயாய்க்
கிடந்து மிருந்தும் எழுந்தும் கீதம் பல பல பாடி
நடந்தும் பறந்தும் குனித்தும் நாடகம் செய்கின்றனவே [நம்பால். — திருவாய் 5-2-4

---

தோட்டலர் பைந்தார்ச் சுடர்முடியானைத்
தொழுது நன்மொழியால் தொகுத்துரைத்த
பாட்டிவை பாடப் பத்திமை பெருகிச்
சித்தமும் திருவொடு மிகுமே. — பெரிய 10-9-10

போலிக போலிக போலிக! — திருவாய் 5-2-1

---

# SRI RAMANUJA & SRI KRISHNA

## A COMPARISON

**(Translated from the Tamil essay published in the Tamil journal "Sri Ramanuja" by Sri Kanchi P. B. Annangarachariarswami)**

(By S. RANGASWAMI, M. A.)

[In issue No. 5 of Sri Ramanuja, ten points of comparison between Lord Krishna and Sri Ramanuja were published. The remaining portion of the article concluding the essay is herein printed"—Editor]

Even as Kaliya with his five hoods emitting poison wrought destruction to the lives around him, men of other creeds work havoc by their five methods of wrong reasoning. (1) There are first those who deny the existence of God altogether (i. e. atheists) (2) Those who believe in God, but do not accept the Sastras for attaining him. (3) Those who accept the Sastras for attaining God, but deny him qualities or attributes, and who will not worship His images (4) Those who do not believe in one, but in many Gods (5) Those who deny the existence of the world, calling it a mere nullity or Illusion. The five-fold distortions of the Vedas by men of other creeds were condemned outright by Sri Ramanuja who overcame his opponents in spite of their dialectic skill in debate, and like Sri Krishna danced the dance of victory on their heads.

11. Among Sri Krishna's heroic deeds was his destruction of one Asura called Kesi, who came in the guise of a fierce overbearing horse. In the Upanishads our senses are compared to a powerful horse and it was Sri Ramanuja's glorious achievement that he was able to control the five senses by his conquest of self.

12. Among Kamsa's wicked agents who were sent on an errand to kill Sri Krishna, there was one Asura who appeared in the form of a calf and another who shaped himself into a wood-apple tree. Sri Krishna, catching hold of the calf by its hind legs, whirled it round and round. and threw it against the wood-apple tree destroying them both at one stroke. Sri Ramanuja also employed Sri Krishna's strategy, whilst disproving the contradictory ideas in his opponent's creeds by using them against each other.

13. According to age-long custom, the cowherds were offering worship to Lord Indra; and several cart-loads of rice, curds, ghee and vegetables were collected ... the elaborate ritual. Sri Krishna advised the cowherds to offer their worship ...ovardhana hill instead of to Lord Indra whose conceit he wished to destroy.

Assuming the guise of a God, Sri Krishna received the offerings himself and ate them Lord Indra was wroth at the slight offered to himself and set the clouds in motion to pour down hail-stones. For seven days and nights there was a heavy and unceasing down-pour of rain with pellets. Nothing daunted, Sri Krishna lifted up the Govardhana hill, and held it up like an Umbrella protecting the cattle and cowherds from all harm. This story is well-known to all who have read the Bhagavata-purana. Several lessons can be learnt from this beautiful story. Sri Krishna was averse to the worship of many Gods, and considered that in spite of men's erring ways, the offerings to other Gods would ultimately reach and be accepted by the Supreme as intended for Himself. He had the nobility of mind and magnanimity of heart to resist from harming those who had intended him evil. He always sheltered from harm all those who had sought his protection. The Divya Prabandam depicts the true devotee as one who even in a state of forgetfulness will not turn to Gods other than Sri Narayana for refuge. Sri Ramanuja's teachings, like those of the Alwars were directed towards the worship of the one Supreme Lord (i. e. Lord Narayana). Since Sri Ramanuja, who was himself an incarnation of the Divine spirit came to this world as a teacher of Brahma-Gnana, it is correct to conclude that the worship offered to Sri Ramanuja reaches the Supreme through the teacher. Sri Vachana Bhushanam or "the Beautiful Word-jewel" defines the true teacher as one who should show towards the evil-doers, patience, mercy, a smiling countenance, toleration and gratitude (Sri Vach: 365) and Sri Ramanuja exemplied in his own life all these qualities. Just like Sri Krishna, he has saved humanity from the torrential rains of Samsara. Sri Krishna protected his beloved cowherds for seven days, whilst Sri Ramanuja saves his devotees from the evil of seven-fold seven births

14. To marry his sweet-heart Nappinna, Sri Krishna subdued seven fierce demonaic bulls accepting the wager fixed by the girl's father for the marriage. Sri Ramanuja has likewise subdued the seven deadly enemies called Kama, Krodha, Lopa, Moha, Matha, Mathsarya and Asuya and has tied the holy necklace of Thirumanthra composed of eight yarns aud three threads around the devotees' neck

15. Just as Sri Krishna threw down the two wrestlers **Chanura** and **Mushtika** Sri Ramanuja overcame Ahankara and Mamakara, egoisom and selfishness which wrestle for mastery over ones' self. The slaying of the mad elephant "Kuvalayapita" by Sri Krishna may be compared to Sri Ramanuja's conquest of the Indriyas or the mad elephant of the senses. Sri Krishna entered the abode of the gardener malakara, and accepted the flowergarlands presented by him. Sri Rama[illegible] likewise accepted the homage of eight flowers from his disciples—the eight flo[illegible]

of ahimsa; Indriya-nigraga, Sarvabhuta-daya, Kshama, Gnana, Tapas, Dhyana, and Satyam: (Non-violence, conquest of the self, mercy towards all living things, forgiveness, knowledge, meditation, prayer and Truth)

16. Sri Krishna slew Kamsa the tyrant, Sisupala and the Kauravas and helped the cause of the righteons Pandavas. In the same way, Sri Ramanuja made it impossible for the pernicious creeds of Nihilism, of Sakhyas and Shamanas (Jains) to exist, and spread the beautiful truths of Sri Vaishnavism on earth through his commentaries such as the "Arthapanchaka". Several simiral comparisons may be instituted between Lord Krishna and Sri Ramanuja by the devout.

# 'THIRUPPAVAI'

# OR

# HYMNS TO THE BEAUTEOUS GRACE.

## INTRODUCTION

### 1. The Poetess

The thirty hymns here presented are known as "Thiruppavai" or "Hymns to the Beauteous Grace." They were composed by a great Tamil Poetess, Sri Andal of SriVilliputtur, a small town in Tinnevelly district. She was one of the twelve Tamil Vaishnava Singers popularly known as the Alwars, and was herself the pet and adopted daughter of Peri-Alwar or the Great Saint, born of a poetic race whose inheritance was divine wisdom,--pure and undefiled,—and trained from her girlhood towards saintly discipleship by her erudite father. Sri Andal vowed that she would wed none other than Lord Vishnu. In a poem addressed to the Lord of Love or Kamadeva, she says. "If to any human being thou wouldst speak of wedding me, cease would I to live." Sri Andal has contributed one hundred and seventy three verses to the Sacred collect of all the Alwars known as "Nalayira-Divya-Prabandam" or "the Golden treasury of Four-thousand." Her other work; besides "Thiruppavai" is styled as "Nachiyar Thirumoli" or the Bridal Queen's Beautiful Utterances."

### 2. God, the Eternal Bride-groom

The Lord can be approached in a spirit of passionate love and utter self-for t..tion. He is viewed as the Eternal Bride-groom or "Nithya-Manavalan" to G

and the human soul, as the "Bride-elect" or "Bride-in-waiting." The Alwars have sung of the Lord, assuming in their poetic fashion, a maidenly guise. The poetic justification for this assumption of femininity is that the Lord is so powerful in His masculine might that human strength is nothing but womanliness before His Splendour. While all the other Alwars were masculine by birth, Sri Andal, alone among them, was a woman, and could naturally and fittingly adopt the tone and the garb of the bridal queen While all the other Alwars waited for the Lord to come and wake them up, Sri Andal chose to go out in the company of other damsels of her own frame of mind in quest of the Lord, so that all might bathe in His Divine grace. Hers is not a selfish and narrow Heaven whose doors are open only to austere pilgrims of penance,—but a boundless, expensive Paradise where service to the Lord and His devotees betokens endless pleasure, and where companionship in such service increases the rapture thousandfold. And what a jest does Sri Andal practise! She, who was brought up in a high brahmin family of noble learning and pedigree assumed the role and guise of a low, simple, unlettered Cowherd lass so that she might wed Sri Krishna, who had been brought up by cowherds, and whose rise to royalty and power did not diminish his love for them. The "Ras-Lila" or the 'play of Love", where God is the centre and circumference of this Love-episode with human souls for His eternal partners in the dance is the theme of Thiruppavai. God's companionship with the low and the forlorn is such that it is impossible to reach Him unless one becomes low and contrite in spirit.

### 3. An Allegorical Pastoral Lyric

"Thiruppavai" may be fittingly styled as an Allegorical Pastoral Lyric. Its theme is the universal one of the attainment of the Lord through service to humanity, (Bhagavatha-Kainkaryam), and in this respect, may be likened to Leigh Hunt's famous poem, "Abou Ben Adam." In this pastoral lyric, Sri Andal weaves ideas into a magic garment of peerless artistry in such a way that it is difficult to distinguish the woof from the warp. The simple faith of the village peasantry and thier unique festival for invoking the rains with rites, rituals, and symbols turn out in reality to be a search for the beautiful beloved Sri Krishna, without whose grace life has no meaning.

Like a kindly light, Sri Andal leads the wondering reader who has awakened from his slumber, at early dawn, step by step towards God's very throne of bliss–"Ratna-Simhasana" from which a mere glance from His beauteous eyes twain would dispel the curse of life.

(To be Continued)